# தத்துவக் கதைகள்

அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

ஸ்ரீ சுவாமி வேதானந்தா







வெளியிடுவோர் :

## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை,

இராசிபுரம் :: சேலம் மாவட்டம்.

விலை] 1990 [ரூ. 10

* O *

Translation of

"PHILOSOPHICAL STORIES"

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of*:

Humble devotees of
GURUDEV SIVANANDA

Printed at The Literary Press, Salem - 636 001

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளி நாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக் கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டு ஞானயக்ஞத் தொடரில் குருதேவரின் ''தத்துவக் கதைகள்'' என்ற நூலை ஸ்ரீ சுவாமி வேதானந்தா அவர்கள் மிக மிக அற்புதமாக தூய எளிய தமிழில் அழகிய முறையில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

சிதானந்தா

ஓம்

# பொருளடக்கம்

# தத்துவக் கதைகள்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| பெயர் | ஊர் | | ரூபாய் |
|---|---|---|---|
| Smt. Parvathi Sundaram, | Singapore. | ... | 400 |
| Sri. A. Alagappan, | Bangalore | ... | 300 |
| Smt. & Sri. R. Krishnasamy, | Malaysia. | ... | 300 |
| Smt. & Sri. S. Vijayaratnam, | ,, | ... | 300 |
| Smt. & Sri. S. Nesadurai, | ,, | ... | 300 |
| Sri. V. R. Annamalai, | ,, | ... | 300 |
| Smt. & Sri V. M. Ramiah, | ,, | ... | 300 |
| திரு. பித்துக்குளி முருகதாஸ் | சென்னை-4 | ... | 250 |
| ,, K. A. A. சங்கரலிங்கம், | திருநெல்வேலி | ... | 200 |
| ,, C. L. பாலசுப்பரமணியம், | கோவை-18 | ... | 121 |
| ஸ்ரீ சுவாமி அதுலானந்த ஸரஸ்வதி, | பிள்ளையார்பட்டி | ... | 101 |
| திரு. மனம்சேர சந்திரகாசன், M.A., B.Ed. | சேலம்-7 | ... | 101 |
| Sri. R. K. Rajagopal | Korba (M. P.) | ... | 101 |
| திரு. T. S. P. மனோகரன், | விருதுநகர் | ... | 100 |
| சுவாமி அய்யம் பெருமாள் | ,, | ... | 100 |
| திருமதி G. சுகந்தினி, | சித்தூர் | ... | 100 |
| பேராசிரியர் E. சுப்பரமணியம், M. A., | ஆற்காடு | ... | 100 |
| திரு. M. M. சுப்பரமணியம், | தூத்துக்குடி | ... | 100 |

| | | | |
|---|---|---|---|
| திரு. P. T. துளசிராமன் | இராசிபுரம் | ... | 100 |
| Smt. N. Meera Sriram Naidu | Bangalore | ... | 100 |
| Sri. V. L. Nagaraj | ,, | ... | 100 |
| திரு H. சங்கர்லால், | அரவங்காடு, நீலகிரி | ... | 100 |
| ,, R. நரசிம்மன், | நாக்பூர் | ... | 100 |
| ,, M. சந்திரமோகன், M. Com. | சென்னை-5 | ... | 100 |
| ,, V. P. கந்தசாமி, | விருதுநகர் | ... | 100 |
| ,, S. குமார், | திண்டுக்கல் | ... | 100 |
| ,, E. K. போஜன், (டைலர்) | இனித்துறை, நீலகிரி | ... | 100 |
| ,, M. கோபால், A.S.T.C. டிரைவர் | செக்காரப்பட்டி | ... | 100 |
| ,, D. பாலசுப்பரமணியம், | திண்டிவனம் | ... | 100 |
| ,, M. V. சுப்பராயலு, | ஆவணிப்பூர் | ... | 100 |
| ,, C. A. சுப்பரமணியம் & திருமதி சரஸ்வதி, | சேலம்-6 | ... | 100 |
| திருமதி K. C. பத்மாவதி அம்மாள், | சேலம்-5 | ... | 100 |
| ஸ்ரீ சுவாமி சித்சபேசானந்தா, | பொன்மலை, திருச்சி-4 | ... | 100 |
| அருட்செல்வன் ஸ்ரீராம், | ஈரோடு | ... | 100 |
| கலிங்கா டெக்ஸ்டைல்ஸ், | ஈரோடு-3 | ... | 100 |
| திரு. V. R. சாமியப்பன், | ஈரோடு-9 | ... | 100 |
| ,, P. மாணிக்கம், | மேச்சேரி | ... | 100 |
| ,, K. சுந்தரம், B. E., M. I. E. | கோவை-41 | ... | 100 |

---

"முத்தமிழ்ப்பண்ணை"
வைரி செட்டிப்பாளையம்-621012,
திருச்சி மாவட்டம்.

# தத்துவக் கதைகள்

## 1. நாரத மஹரிஷி

மகாவிஷ்ணுவின் பக்தர்களில் நாயகனுய் விளங்கும் நாரத முனிவரை, ஒரு காலத்தில் துவாரகையில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அதிக அன்புடன் வரவேற்ருர். தனது சிம்மாசனத்திலே அமரும்படி உபசரித்து தமது நாமங்களைப் பாடித் திரிலோகங்களிலும் சஞ்சரிக்கின்ற அம்முனிவரைப் பார்த்து, ''முனிவரே! மூன்று லோகங்களிலுமுள்ள மக்களின் க்ஷேம லாபங்கள் எப்படி?'' என்று வினவினுர்.

பகவானுடைய இதர வினுக்களுக்கும் விடை அளித்து வருகையில் நாரத முனிவர் "ஸத் ஸங்கத்தின்" மஹிமையைப் பற்றி அநேக தடவை களில் தாங்கள் சொல்லவும் கேட்டிருக்கிறேன். பரமார்த்திக முன்னேற்றத்திற்கு இது வெகு இன்றியமையாததாமே! தாங்கள் எனக்கு துருவன், பிரஹ்லாதன், சிபி, பலி, உத்தவர் இன்னும் பல பக்தர்களின் சரித்திரத்தைச் சொல்லி இருக்கிறீர்கள். இந்த விஷயத்தைப் பற்றி தயவு செய்து திருவாய் மலர்ந்தருளுங்கள்,'' என்று பயபக்தியோடு விண்ணப்பித்துக் கொண்டார்.

அதற்குப் பகவான், ''ஆம், நாரதரே! ஸத் ஸங்கம் இல்லாமல் என்னை அடைந்தவர் எவரையும் நான் பார்த்ததே இல்லை. கேட்டதே இல்லை. இது பற்றித் தெரிந்து கொள்ள நீர் அருகதை உள்ளவர்; ஏனெனில் திரிலோகசஞ்சாரியாகிய நீர் ஸத் ஸங்கத்தின் மஹிமையைப் பரப்பிவிடுவீர். தற்சமயம் ஸத்ஸங்கத்தின் பிரயோஜனத்தை

எடுத்துக்காட்டலாம். இங்கிருந்து நான்காவது மைலில் ஒரு ஆலமரம் இருக்கிறது. அதில் கொட்டைகளைக் கொறித்துக் கொண்டும், துள்ளிக் குதித்துக் கொண்டும் உல்லாசத்துடன் ஓர் அணில் வாசம் பண்ணுகிறது. தன் இனத்துடன் அது இணக்கம் வைத்துக் கொள்வதில்லை. தனித்து இருக்கும். உடனே அங்கே சென்று ஸத் ஸங்கத்தின் நன்மைகளை அணிலிடம் கேளும். அது தெரிவிக்கிறதைக் கவனியும்'' என்று பகர்ந்தார்.

அங்ஙனமே, நாரத முனிவர் பிரயாணமானார். வழி நெடுக, ஸத் ஸங்கத்தின் நன்மைகளை எப்படி ஒரு அணில் தெரிவிக்குமென்று வியப்பெய்தினார். பகவான் குறித்த ஆலமரத்தை அடைந்ததும், அதில் நாரதர் அணிலைக் கண்டார். ''அணில் ஐயா! ஸ்ரீ கிருஷ்ண பகவான் என்னை இங்கு அனுப்பினார், தயவு செய்து ஸத் ஸங்கத்தின் நன்மைகளை எனக்குச் சொல்லும்'' என்று முனிவர் கேட்டார். என்ன ஆச்சரியம்! அக்கணமே அணில் கீழே விழுந்து இறந்தது. முனிவர் தமது எண்ணத்திற்கு மாறாக, அணில் ஆவி துறந்தது பற்றி பெரிதும் வருந்தினார். துவாரகைக்குத் திரும்பினார். பகவானிடம் நடந்த விவரத்தைக் கூறி தாம் செய்த குற்றத்தை மன்னிக்குமாறு பிரார்த்தித்தார்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான், ''முனிவரே! கவலைப் படாதீர். அணில் இறந்தது பற்றி ஏதேனும் பாவம் வந்து விட்டதென அஞ்சாதீர்; ஆலமரத்திலிருந்து நான்காவது மைலில் நானாவித மலர்களாலும், கனிகளாலும் செறிந்து விளங்கும் வனப்பு வாய்ந்த பூங்காவனம் ஒன்றுண்டு. அதில் ஒரு மாமரம். அம்மரத்தில் ஒரு கூடு தொங்குகிறது. அதிலே சப்த (ஏழு) வண்ணங்களுடன்

கூடிய அழகிய கிளி ஒன்றைப் பார்ப்பீர். அக்கிளியிடம் கேட்டால் ஸத் ஸங்கத்தின் நன்மைகளைச் சொல்லும்'' என்று மொழிந்தார்.

அங்ஙனமே நாரதர் பயணமானார். மாமரத்துக் கூட்டில் அழகியதோர் கிளி இருக்கக் கண்டு தைரியமாகக் கேள்வி கேட்டார். அப்பறவையிடம் வினா கேட்கப்பட்டதோ இல்லையோ, உடனே அது ஸ்மரணையற்று வீழ்ந்து இறந்து விட்டது. மீண்டும் ஏமாற்றமடைந்த நாரதர் திரும்பினார் துவாரகைக்கு. நிகழ்ந்தது கூறப் பட்டது. இந்தத் தடவை மனத்தில் சஞ்சலமடைந்தார். அதே நேரத்தில் அதெல்லாம் ஆண்டவனின் லீலைகள் எனவும் எண்ணலானார். ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா, ''முனிவரே! நீர் இரு முறை ஏமாந்தீர். எனக்கு வருத்தம் உண்டா கிறது. ஆனால், உமது முயற்சியில் இந்தத் தடவை வெற்றியைக் காண்பீர். இனி மோசம் போக மாட்டீர்! இது உறுதியென நம்புவீர். அயோத்திமா நகரில், இரகு வம்சத்தில் உதித்த இராஜா ஒருவர் குடி மக்களைத் தமது சொந்த புத்திரர்கள் போலப் பாதுகாத்து அரசாட்சி புரி கின்றார். இன்று அவருக்கு ஒரு குழந்தை பிறந்திருக் கிறது. பிறந்த அக்குழந்தையிடம் ஸத் ஸங்கத்தின் நன்மைகளைப் பற்றிக் கேட்டால், நிச்சயமாக நீர் விடை பெறுவீர்'' என்று விவரித்தார். இப்போது நாரதர் முன்னிலும் அதிகமாகக் கவலைப் பட்டார். தம்மைக் கண்டவுடனே குழந்தையும் இறந்துவிடுமானால், தமது நிலை மோசமாகி தமது உயிர்க்கு ஆபத்தாய் முடியுமென்று கருதலானார். எனினும், பகவானுடைய விருப்பப்படி நடக்க வேண்டும். எனவே, நாரதர் அயோத்திமா நகருக்குப் புறப்பட்டார். மன்னரிடம் போய் குழந்தையைத் தாம் பர்ர்க்க வேண்டுமென்றார்.

அரசன் நாரதரைப் பக்தியோடு வரவேற்று, தமது புத்திர ஜனனத்தின்போது அத்தகைய முனி சிரேஷ்டரைத் தரிசிக்கும் பாக்கியம் வாய்க்கப் பெற்றமைக்காகப் பெரிதும் மகிழ்ந்து உபசரித்தார். நாரத முனிவர், ''அரசரே! தங்கள் பக்தி சிரத்தைக்காக நான் நிரம்பவும் சந்தோஷிக்கிறேன். பிறந்த பாலனிடம் ஒரு கேள்வி கேட்க விரும்பு கிறேன். அதற்கு விடை பகர அக்குழந்தைக்கே திறமை உண்டு'' என்று தமது கருத்தை வெளியிட்டார். உடனே அரசர் உத்திரவிடவும், அரசியே பாலனை ஏந்தி வந்து முனிவர் முன்பு தங்கக் கட்டிலில் வைத்தார். பாலன் புன்முறுவல் செய்தான். ''அன்புள்ள பாலா ஸத் ஸங்கத்தின் நன்மைகளைச் சொல் எனக்கு'' என்று வினவினார் முனிவர். எல்லோரும் அதிசயிக்கும்படி அக்குழந்தை கட்டிலில் எழுந்து நின்று கொண்டு, ''முனிபுங்கவரே! எவ்வளவு அதிர்ஷ்டசாலி நான்! இதுதான் ஸத் ஸங்கத்தின் நன்மை. ஆலமரத்தில் அணிலாக இருந்தபோது, எனக்குக் கிடைத்த தங்கள் தரிசனம் மாத்திரம் மேலானதாகிய கிளியின் ஜன்மத்தை அருளியது. அக்கிளியாகிய எனக்கு தாங்கள் மீண்டும் தரிசனம் அளித்தீர்கள். தங்கள் பேரன்பின் காரணமாக, இப்போது நான் மனுஷ்யப் பிறவி அடைந்துள்ளேன் – அதுவும் சக்கரவர்த்தியின் புத்திரனாக தங்கள் பேரருளால் எனது வாழ்க்கையின் இறுதியான இலக்ஷியத்தை – ஸ்ரீ வைகுண்டாதிபதியோடு இரண்டறக் கலத்தல் எனும் புண்ணிய கதியைப் பெறுவேன்'' என்று சாங்கோபாங்கமாய்ச் சாற்றினான். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் நாரத முனிவர் மிகவும் மகிழ்ச்சியடைந்து குழந்தையை ஆசீர்வதித்தார். அப்பால், ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் சந்நிதி அடைந்து ஸாஷ்டாங்கமாகத் தண்டம் சமர்ப் பித்தார். ''ஸ்வாமீ! தங்கள் லீலைகள் அதிசயம்!

அதிசயம்!! என்ன நேருமோவென்று நான் சந்தேகித்தேன். என் அறியாமைக்கு மன்னியுங்கள். ஸத் ஸங்கத்தின் பலன்களைத் தெரிந்து கொண்டேன். திரிலோக நாயகரே! வாழ்க! ஓம் நமோ நாராயணு! வாழ்க'' என்று ஸ்தோத்தரித்தார். பரமாத்மாவின் நாம ஸங்கீர்த்தனம் பண்ணிக் கொண்டே வழி நடக்கலானுர் நாரத பிரஹ்மம்.

## 2. ஒரு வேடன்

ஒரு காலத்தில், நாரத மகா முனிவர் ஒரு காட்டின் வழியே போய்க் கொண்டிருந்தபோது, ஒரு மான் மரணவஸ்தையில் துடித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். அதன் கால்களில் ஒன்று அம்பு பாய்ந்து முறிந்து போயிருந்தது. கொஞ்ச தூரம் சென்றதும், அதே நிலேயில் ஒரு ஆண் பன்றியும் ஒரு முயலும் தவித்துக் கொண்டிருந்ததைக் காண்டார். அவருக்கு மிக்க பரிதாபமாய் இருந்தது. மரத்தின் பின்னுலிருந்த புதரில் வேடன் ஒளிந்து கொண்டு, ஓர் மானேக் கொல்ல, வில்லே வளேத்து, நாண் ஏற்றி அம்பு எய்யத் தயாராய் இருந்தான்.

அவனிடம் நேராக நாரதர் செல்லவே, மான் தப்பித்துக் கொண்டது. தனது கவனத்தை மாற்றிய முனிவர் மீது வேடன் கோபங்கொண்டு அவரைத் தூற்றினுன். வேடன், ''முனிவரே! ஏன் என்னிடம் வந்தீர்? குறி வைத்த மான் நீர் குறுக்கே வந்தபடியால், ஓடியே போயிற்று'' என்று குறை கூறவே, நாரதர், ''நான் வழி தவறி விட்டேன், வேடா! உன்னே ஒன்று கேட்கிறேன். மிருகங்களே வேட்டையாடினுல், அவைகளே ஏன் குற்றுயிராய்க் கிடத்துகிருய்? அவைகளேப்

பூராவும் ஏன் கொல்லக்கூடாது? குற்றுயிராய்க் கிடக்கும் மிருகங்கள் மிகவும் துன்புறுகின்றன'' என்று கூறினூர். வேடன், ''முனிவரே! குற்றுயிரா யுள்ள மிருகங்கள் படும் அவஸ்தைகள் எனக்குப் பரமானந்தத்தைத் தருகின்றன'' என்று பதிலுரைத்தான். மேலும், அவ்வேடன், ''முனிவரே! என்னுடைய குடிசைக்கு வாருங்கள். மான் தோலோ, புலித்தோலோ தங்களுக்குத் தருகிறேன்'' என்று அழைத்தான். நாரதர் அதற்கு, ''வேடா! எவ்விதத் தோலும் எனக்கு வேண்டாம். எனக்கு உறுதியான ஓர் வாக்குத் தத்தம் கொடு. அது மாத்திரம் போதும். நாளை முதல் நீ எந்த மிருகத்தைக் கொல்வதானுலும், அதைக் குற்றுயிராய்க் கொல்லாமல், முற்றிலும் கொன்று விடு'' என்ருர். வேடன், ''முனிவரே! என்ன வேடிக்கையான வரத்தைக் கேட்கிறீர்கள்? ஒரு மிருகத்தைக் குற்றுயிராய்க் கிடத்தி விடுவதால் என்ன தீங்கு உண்டாகும் என்பதைத் தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்'' என்று கேட்டான். அதற்கு நாரதர், ''காயமடைந்த பிராணிகள் சகிக்கவொண்ணுத வலியால் தவிக்கும். அதனுல் நீ பெரிய பாவத்தைச் செய்தவனுகிருய். சித்திர வதை செய்யப்பட்டு, மரணத்துக்கு உள்ளான இம்மிருகங்களெல்லாம் அடுத்த ஜன்மங்களிலே இதே மாதிரியாக உன்னைக் குற்றுயிராய்க் கிடத்திக் கொன்று பழிக்குப் பழி வாங்கும். தாக்குதல் கட்டாயமாக எதிர்த் தாக்குதலைச் செய்யும். கர்மா எனும் சட்டமானது இரக்கமும் தயை தாக்ஷண்யமும் இல்லாதது'' என்ருர்.

நாரத முனிவரது திருவாயிலிருந்து வெளிப் பட்ட ஞான மயமான திருவாசகங்களைக் கேட்டதும் வேடன் பெரும் உணர்ச்சிவசப்பட்டான். பயமும் பச்சாத்தாபமும் அவனைப் பிடித்துக் கொண்டன.

தான் செய்த தீய செய்கைகளுக்காகப் பச்சாதாபப் பட்டான். அவன் கண்களிலிருந்து அருவி போலக் கண்ணீர் பெருகியது. நாரத முனிவரின் திருப் பாதங்களிலே அடியற்ற மரம் போல விழுந்தான். ''மஹரிஷியே! இழிவான பாபி நான்! பிள்ளைப் பிராயந்தொட்டு இதுகாறும் என் தொழில் இதுவே. என்னை ஈடேற்றுங்கள், தேவரே! என்னைக் காப்பாற்றுங்கள். தங்களையே பூரணமாகச் சரண் புகுகின்றேன்'' என்றான். நாரதர், ''மறு பேச்சில்லாமல், என் புத்திமதியைப் பின் பற்றுவாயானால், உன்னை நான் ரக்ஷிக்கிறேன்'' என்றார். அதற்கு வேடன், ''மதிப்பிற்குரிய மஹரிஷியே! எழுத்துக் கெழுத்து மாறாமல் தங்கள் கட்டளையைச் சிரசின் மேல் வகித்து நிறைவேற்றுகிறேன். தங்கள் சித்தம் போல நடக்கிறேன்'' என்று பணிந்தான். நாரதர், ''ஓ, வேடா! வில்லை உடனே முறி'' என்றார். வேடன், ''பிறகு எப்படி ஜீவிப்பது? ஸ்வாமி!'' எனவும், நாரதர், ''தினந்தோறும் ஆகாரம் படைக் கிறேன். அதற்காகக் கவலைப்படாதே, குழந்தாய்!'' என்று தேற்றினார்.

வேடன் உடனே முறித்தான் வில்லை. அவனைப் பார்த்து, ''நேராக வீடு திரும்பி, உன் சொத்துக் களை ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடு. கங்கா தீரத்திலே ஒரு குக்கிராமத்தில் ஒரு சிறு குடிசை கட்டிக் கொள். ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய நாமத்தையே இடை விடாமல் பாடு. ''ஓம் ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே, ஹே நாதா நாராயண வாஸுதேவா'' என்று எப்போதும் ஜபிப்பாய். தினந்தோறும் போதுமான உணவை அனுப்பி வைக்கிறேன். உன் பெயர் இனி கிருஷ்ணதாஸ்'' என்று உபதேசித்தார். வேடனாகிய கிருஷ்ணதாஸ் உபதேசத்தைப் பிறழாமல் பின்பற்றினார்.

கங்காதீரத்திலே ஒரு பெரிய மஹரிஷி வந்துள்ளார் என்பதை கிராமவாசிகள் அறிந் தார்கள். புது மஹானுக்காகப் பத்துப் பதினைந்து பேர் தினந்தினம் போஜனம் தயாரித்துக் கொடுத் தார்கள். வேடுவ முனிவர் தமக்குப் போதுமான போஜனத்தை ஏற்றுக் கொண்டார். மனப்பூர்வ மான நம்பிக்கையோடும் பக்தியோடும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினுடைய நாமத்தைப் பாடி வந்தார். இங்ஙனம் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. அவர் ஒரு உண்மையான பக்தர் ஆகி விட்டார்.

''எனது சிஷ்யனைப் போய்ப் பார்க்கலாம், வாருங்கள்'' என்று ஒரு நாள் நாரதர் பர்வத ரிஷியை அழைத்தார். கிருஷ்ணதாஸின் குடிசைக்கு இரு மஹரிஷிகளும் எழுந்தருளினார்கள். கிருஷ்ண தாஸ் தமது ஆடையின் நுனியாலே பூமியில் செல்லும் எறும்புகளை மெதுவாக ஒதுக்கி, வழி செய்து கொண்டு அவ்விரு முனிவர்கள் முன்பாகச் சாஷ்டாங்க தண்டஞ் சமர்ப்பித்தார். குசப் புல்லினால் ஆக்கப்பெற்ற பாய்களின் மீது அமரு மாறு பிரார்த்தித்தார். அவர்களது திருவடிகளை நன்னீரால் கழுவித் தூய்மைப்படுத்தி சரணா அமிர்தத்தை (பாதங்களைக் கழுவிய நீரை) அருந் தினார்; அதில் கொஞ்சம் எடுத்துச் சிரசிலே தெளித்துக்கொண்டார். பின், அவர் ஸ்ரீகிருஷ்ண நாமத்தை உச்சரித்துச் சங்கீர்த்தனம் பாடலானார். மேலே உயர்த்திய கரங்களுடன் அவர் பரவசமாக நடனம் புரிந்து, ஆனந்தக் கண்ணீரை அருவிபோலச் சொரிந்தார். தேஹ உணர்ச்சியே அற்றுப் போய், பாவ ஸமாதியாக ஆறுமணி நேரம் பஜித்தார். பின்புதான் ஸ்தூல சரீர உணர்ச்சி திரும்பியது. கிருஷ்ணதாஸின் மஹத்தான ஆத்மீயப் போக்கு கண்டு முனிவர்கள் மிக்க ஆனந்தமுற்றனர். ''உமக்கு ஆகாரம் கிடைக்கிறதா?'' என்று

நாரதர் கேட்க, கிருஷ்ணதாஸ் ''தாங்கள் அனுப்பும் ஒவ்வொருவரும் உணவைக் கொண்டு வருகிறார்கள்'' என்று பதிலளித்தார். மஹரிஷிகள் அவரை ஆசீர்வதித்துச் சென்றார்கள்.

நாரத முனிவரின் கருணையால் கொடிய வேடன் கிருபாநிதியாகிய முனிவராக மாறிவிட்டான். பரிசமணி இரும்பைப் பொன்னாக்கும்; ஆனால் இரும்பைப் பரிசமணியாகச் செய்ய முடியாது. ஒரு முனிவர் கேடுற்ற பாபியைப் பீடுற்ற முனிவராகச் செய்து விடுவார். ஸத்ஸங்கத்தின் மஹிமையைப் புகலத்தரமன்று. ஒரு கணப் பொழுதேனும் முனிவர்களோடு வைத்துக் கொள்ளும் இணக்கம் கணக்கிட முடியாத நன்மைகளைத் தரும்–துராசார சம்ஸ்காரங்களையும் இலௌகிகத் தன்மையையும் பழுது பார்த்துத் தூய்மைப்படுத்தும். ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்க ஸத்ஸங்கத்தைத் தவிர வேறு பத்திரமான கப்பலே கிடையாது. புதுச் சீடர்கள் குருவின் ஆதீனத்தில் இருக்க வேண்டும். பூரண மாகப் பயிற்சி பெற்று, ஆழ்ந்த தியானத்தில் நிலைத்திருக்கும்வரை.

## 3. எமன் வாக்கு பலித்தது

கோபால் பன்னிரண்டு வயதுடைய சுறுசுறுப்பான புத்திசாலிப் பையன். சென்னைக்குச் சமீபத்திலுள்ள ஒரு கிராமத்தில் வசித்து வந்தான். ஆனந்தமாயும் அமைதியாயும் திண்ணையில் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு முன்னால் ஒரு வைக்கோல் துண்டு இருந்தது. அதைக் கூர்மையாக நோக்கினான். ஓர் விநாடிக்குள் வைக்கோல் பல்லியாகி, அங்கு ஊர்ந்து கொண்டிருந்த எறும்புகளைப் பிடித்துத் தின்றது. பல்லி பூனையாகிச் சில எலிகளைத் தின்றது.

பின் பூனை நாய் வடிவத்தோடு தெருவில் ஓடியது. கோபால் அதை வெகுதூரம் வரை துரத்திச் சென்றான். நாய் நரியாகி சில ஆடுகளையும், நாய் களையும், பூனைக்குட்டிகளையும் அடித்துத் தின்றது. கோபாலோ நரியை விடாமல் பின் பற்றி இராத்திரி முழுதும் காட்டிலே அலைந்தான். விடியும் பொழுது நரி மனிதனாக மாறி குளக்கரைக்குப் போய் உட்கார்ந்தது. அம்மனிதன் மீன்களைப் பிடித்துத் தன் ஆகாரத்தைத் தயார் செய்து கொள்ளலானான். ராத்திரி நரியாயிருந்த அம்மனிதனிடம் கோபால் பயமில்லாமல் நெருங் கினான். அவன் ஆகாரம் கொஞ்சம் கொடுத்தான்.

இருவரும் ஆகாரம் உட்கொள்ளும்போது கோபால் மரியாதையுடன், ''அன்புள்ளவரே! நான் நன்றி பாராட்டுகிறேன். பசியோடிருக்கும் சமயம் உணவைக் கொடுத்தீர்கள். நேற்று முதல் தாங்கள் பல வடிவங்கள் எடுத்ததைக் கண்டேன். தாங்கள் யாரோ, என்ன வேலையோ?'' என்று கேட்டான்.

''பிரியமுள்ள சிறுவனே! நீ கண்டவை அனைத்தும் உண்மை. குறித்த காலத்தில் உயிரைக் கவரும் தர்மத்தைக் கொண்டவன் எமன். சிருஷ்டிக்கிறபோது பிரம்மதேவர் எல்லோருடைய விதியையும் எழுது விடுகிறார். குறிப்பிட்ட நேரத்திலே, குறிப்பிட்ட உருவத்திலே மனிதர்களை நெருங்கி அவர்களின் உயிரைக் கவருகிறேன்'' என்றார்.

இதைக் கேட்கப் பெரும் வியப்பாக இருந்தது கோபாலுக்கு. ''ஜனங்கள் வர்ணித்துப் பேசுவதுபோல், தாங்கள் அவ்வளவு கொடியவரல்லவென்று நான் காண்கிறேன்.

எனக்கு உணவும் கொடுத்துப் பிரியமா இருக்கிறீர்கள். தாங்கள் உண்மையிலேயே எமதர்மராஜாவாயிருந்தால், நான் எப்போது, எங்கே, எப்படிச் சாவேன் என்பதைத் தயவு செய்து சொல்லுங்கள்'' என்று வேண்டினன்.

அதற்கு யமதர்மராஜா ''சிறுவனே! இதெல்லாம் கூறமுடியாது. இது உனக்குத் தெரிந்தால், உனக்கு மரணம் சம்பவிக்கப்போகும் இடத்திற்கே செல்லாமலிருந்துவிட முயற்சிப்பாய். மேலும், அருந்தவம் செய்து சிவபெருமானின் அருளுக்குப் பாத்திரனுகிய மார்க்கண்டேய முனிவரைப்போல, மரணமில்லாப் பெருவாழ்வில் நிலைத்து விடவும் முயற்சிப்பாய். ஆகையால், இந்த இரகசியங்களை வெளிப்படுத்த மாட்டேன்'' என்றார்.

கோபால், ''எமதர்மராஜாவே! நான் சத்தியமாய்ப் பேசுகிறேன். என்னை முற்றிலும் நம்புங்கள். மரணம் நேரவிருக்கும் காலத்திலும் இடத்திலும் தவருமல் நான் இருப்பேன் என்பதை உறுதியாகக் கூறுகிறேன். தயவு செய்து இரகசியத்தைச் சொல்லுங்கள் என்று வெகுவாய் மன்றுடினன். அதற்கு யமதர்மராஜா, ''உன்னுடைய பதினைருவது வயதிலே, காசி க்ஷேத்திரத்திலே கங்கையில் நீ ஸ்நானம் செய்து கொண்டிருக்கும் வேளையில், நான் முதலையாக வந்து உன்னை விழுங்குவேன்'' என்றார். மறு நிமிடம் யமதர்மராஜா அங்கே காணப்படவில்லை. தேடிப் பார்த்தான்; காணேம். பயமும் திகிலும், ஆச்சரியமும் அழுகையும் தோய்ந்த முகத் தோற்றத்துடன் கோபால் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

தனக்கு வரப்போகும் மரணத்தைப் பற்றிப் பெரிதும் கவலைப்பட்டான். ''முதலையாக......... விழுங்குவேன்'' என்று சொற்கள் அவன் காதிலே ரீங்காரம் செய்து பெருத்த அச்சத்தை விளைவித்தன. தனது ஆத்ம சினேகிதனை இராமனிடம் இதைச் சொன்னான். இராமன், ''கோபால்! இக்காலத்திலே இராமேஸ்வரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்து சிவ பெருமானை வணங்கு. இப்படிச் செய்தால் மரணத்தை ஒருவாறு வெல்லக்கூடும்'' என்று தனக்குத் தோன்றிய யோசனையைச் சொன்னான்.

குறிப்பிட்ட பதினாறுவது வயதிலே இராமன் கோபாலனை தென்னிந்திய புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு அழைத்துச் சென்றான். பின், இராமன் காசி க்ஷேத்திரத்திலுள்ள ஸ்நானக் கட்டடங்களின் போட்டோ படங்களைக் கொண்டு வந்து காட்டினான். இராமன் கோபாலனைப் பார்த்து, ''கோபால்! காசி விஸ்வநாதரைத் தரிசிக்காதவன் ஓர் மனிதனே அல்ல. கங்கையில் தீர்த்தமாடி புனிதனாகிப் புண்ணிய மூர்த்தியாகிய காசி விஸ்வநாதரைப் பூஜிப்பவர்களுக்கு சிவபெருமான் புன்முறுவல் செய்து திருவருள் பாலிப்பார். மரணத்தை ஜயிக்க வேண்டுமானால், கங்கா ஸ்நானம் செய்ய வேண்டும். சிவபெருமானே எனது சொப்பனத்தில் வந்து சொன்னார். உன்னை வெகு பத்திரமாக அழைத்துச் செல்லுவேன். பதினாறுவது ஆண்டு நடந்து கொண்டிருக்கிறது. ஒரு நாளையும் வீணாக்கக் கூடாது. ஸ்நானக் கட்டத்திலே வெகு பந்தோபஸ்தான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஒரு மீன் கூட அந்த இடத்தில் நுழையாது. வா, என்னோடு'' என்று கூறியதோடன்றி, போட்டோ படங்களைக் காட்டி, ''இதோ, பார், கங்கையில் எத்தனை சிறுவர்கள்,

ஸ்திரீகள், கிழவர்கள் உற்சாகமாக ஸ்நானம் செய்கிறுர்கள்'' என்று மிகவும் பாராட்டிப் பேசினுன்.

கோபால் ஒருவாறு மனந்தேறி இராமனேடு காசி யாத்திரைக்குப் புறப்பட்டான். கங்கா தீர்த்தக் கட்டத்திலே நூற்றுக்கணக்கான யாத்ரீகர்கள் ஸ்நானம் செய்து கொண்டிருந்ததைக் கண்டான். ஸ்நானக் கட்டத்திலே, நிச்சயமாக முதலே வராது என்பதைத் தீர்க்கமாக உணர்ந்தான் கோபால். எனவே, கங்கா நதியிலே முழங்கால் அளவு இறங்கி இராமனுடைய கையைப் பிடித்துக் கொண்டு நீரில் மூழ்கினுன். அக்ஷணமே, நம்பிக் கைக்குப் பாத்திரனுன அவனுடைய நண்பன் இராமனே, முதலே வடிம் கொண்டு கோபாலனேப் பற்றினுன். தனது ஆத்ம நண்பன் எப்படி தனக்கு அழிவைத் தேடுவானென கோபால் நடுநடுங்கினுன்.

பிறகு முதலே வடிவம் கொண்ட யமதர்ம ராஜா, ''கோபால்! சத்தியத்தின்படி நடந்து கொள்ளவில்லே. கங்கா ஸ்நானத்தைத் தவிர்த்து என்னே ஏமாற்றப் பார்த்தாய். எல்லோருடைய எண்ணங்களேயும் யான் அறிவேன். சிவபெருமானுடைய அருளேப் பெற்ருல் மரணத்தை ஒழிக்கலாமென நானே சொன்னேன். அவருடைய திருவருளேப் பெறுவதற்கு வெறும் புண்ணிய க்ஷேத்திரங்களேத் தரிசித்தாய். ஜபம், ஆத்ம பரிசுத்தம், தியானம் முதலிய தீவிர சாதனேகளேச் செய்ய நீ அக்கறையே கொள்ளவில்லே. முதலே யைப் பற்றி நினேப்பதிலும், என்னே ஏமாற்று வதற்கான தந்திரோபாயங்களேப் பற்றிப் பேசுவதிலும் உன் வாணுளே வீணுக்கி விட்டாய். நீ எவ்வளவு அறிவீனனுக இருக்கிருய்

என்பதைத் தெரிந்து கொள்கிருயா? ஈஸ்வர ஆக்ஞைகளைக் கடக்கவும், ஈஸ்வரரை ஏமாற்று வதற்காகச் சில தந்திரோபாயங்களைக் கண்டு பிடிக்கவும் முயற்சிப்பவர்களுடைய கதி இந்த கதி தான்'' என்று கூறிக் கொண்டே அந்த முதலை கோபாலனை விழுங்கிற்று.

## 4. துகாராம் முனிவர்

துகாராம் முனிவரிடத்தில் கன்ஞன் சிவாஜி கான்சாரிக்கு மிகுந்த பக்தி. கான்சாரி முனிவருடன் சேர்ந்து சங்கீர்த்தனம் பாடுவார். துகாராம் முனிவர் விஜயம் செய்தால், தமது கடையை மூடிவிட்டு ஸத்ஸங்கமாய் முனிவரின் உபதேசங்களைக் கவனிப்பார். முனிவரிடத்தில் அவ்வளவு அபரிமிதமான நம்பிக்கையும் பக்தியும் கொண்டவர். கான்சாரியின் மனைவிக்கோ தன் கணவனின் போக்குப் பிடிக்கவில்லை. தன் கணவனின் மன மாற்றத்திற்குக் காரணமான முனிவரைக் காணும் போதெல்லாம் அவளுக்குக் கோபம் பீறிக் கொண்டு வரும். ஒரு நாள் அவள் முனிவரைப் பார்த்து, ''முனிவரே! இன்று குளிர் காற்று அடிக்கிறது. வெந்நீர் ஸ்நானம் பண்ணுங்கள்'' என்று கூற, முனிவர் சம்மதித்தார்.

கன்ஞன் மனைவி சிறிது நேரத்தில் முனிவரை ஓர் பலகை மீது அமரச் செய்து, அவரது சிரசிலே கொதிக்கிற ஜலத்தை ஊற்றிஞள். தேகம் முழுதும் கொப்புளங்கள் உண்டாயின. ஆனுல் முனிவரோ பேசாமல் இருந்து விட்டார். அவர் மனம் சிறிதும் கலங்கவில்லை; ஒரு வார்த்தையும் எதிர் பேசவில்லை. இதற்கு மாருக, அவர் அவளை ஆசீர்வதித்தார். அவரது மனம் சதாகாலமும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பாதார விந்தங்களிலே லயித்துப்போய்

இருந்தமையால் அவர் எவ்வித வலியையும் உணரவில்லை.

கொதிக்கிற நீரை ஊற்றியபடியால் உண்டான கொப்புளங்களைக்கூட கவனிக்காமலும், ஒரு சிறிதும் கலங்காமலுமிருந்த முனிவரைக் காணக்காண அவளுக்குப் பிரமை பிடித்து விட்டது. அவளது இயற்கைக் குணம் உடனே மாறியது. தான் செய்த அடாத செயலுக்காக அவள் பெரிதும் பச்சாத்தாபப்பட்டாள். முனிவர் முன்னுல் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து, ''முனிபுங்கவரே! எனது கொடிய செயலை மன்னியுங்கள். தங்கள் திருவருளால் என் மனம் முற்றிலும் மாறிவிட்டது. இப்போது நான் புதிய ஸ்திரீ. மிருதுவான ஹிருதயம் எனக்கு உண்டு. தங்கள் அருகிலே இருந்து தங்களுக்குப் பணிவிடை செய்வதற்கு என்னையும் என் கணவனையும் அனுமதியுங்கள்'' என்று மன்றுடிஞள். அங்ஙனமே, தமக்குத் தொண்டு ஆற்றுவதற்கு அத்தம்பதிகளை அமர்த்திக் கொண்டார். அவர்கள் துகாராம் முனிவரின் ஆத்ம சிஷ்யர்களாக ஆகிவிட்டார்கள்.

முனிவர்களும் மஹான்களும் தேகப் பிரக்ஞைக்கு அதீதமானவர்கள். த்வந்தங்களான சந்தோஷம் துக்கம்; மானம் அவமானம்; மரியாதை அவமரியாதை; புகழ்ச்சி இகழ்ச்சி; வெப்பம் தட்பம் முதலியவைகளை அவர்கள் அடக்கி ஆண்டு உள்ளார்கள்; மனத்தைச் சதா பகவான் மீது பதித்துக் கொள்வதால் அவர்களுக்கு மனே நாசம் ஏற்பட்டுள்ளது. தீமைக்கு நன்மையே எப்போதும் செய்வார்கள்; ஹிம்சித்தவர்களை ஆசீர்வதிப்பார்கள்; தங்களுக்குத் தீங்கு செய்தவர்களின் க்ஷேமத்தைக் கோரி பிரார்த்தனை செய்வார்கள். அவர்கள் தயாளமும் அருளுமே வடிவானவர்கள்.

இலௌகிக மனிதன் அவர்களுடன் ஒரு கணப் பொழுது தங்கினுலும் அது ஆசீர்வாதமாகும். அவனுடைய இயற்கைச் சுபாவத்தில் ஓர் புதிய மாற்றத்தை உண்டு பண்ணிவிடும். சத்காரியத்தி னுடைய நன்மைகளைத் தக்க வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. முனிவர், மஹான் அல்லது யோகி இவர்களின் மஹிமையோ வாக்குக்கு எட்டாதது.

## 5. மாம்பழக்காரனின் யதார்த்த புத்தி

ஒரு காலத்தில் ஒரு ராஜா பெரிய விருந்து நடத்திஞர். எல்லா அரசர்களையும், ஜமீந்தார் களையும், உத்தியோகஸ்தர்களையும் அழைத்தார். திராக்ஷைப் பழம், ஆரஞ்சுப் பழம், ஆப்பிள் பழம், பலாப்பழம், தின்பண்டங்கள், காய்கறி வகைகள் யாவும் ஏராளமாயிருந்தன.

நல்ல மாம்பழங்கள்தான் கிடைக்கவில்லை. அப்போது மாம்பழங்களை விற்றுக்கொண்டே ஒருவன் சாலை வழியே போனுன். வாசல் காப்போன் மாம்பழக்காரனை அழைத்து, ''அரண்மனையில் பெரிய விருந்து. உனது மாம்பழங்களையெல்லாம் ராஜா விலைக்கு எடுத்துக் கொள்வார். ஆனுல் உன் லாபத்திலே எனக்குப் பாதி கொடுத்துவிட வேண்டும். அப்போதுதான் உள்ளே நுழைய விடுவேன்'' என்றுன். முதலில் மாம்பழக்காரன் தயங்கினுன். பிறகு சம்மதித்தான். அவன் ஹாஸ்யமும் அறிவும் படைத்தவன். அரண் மனைக்குள் போக அனுமதிக்கப்பட்டான்.

அரசர் எல்லா மாம்பழங்களையும் விலைக்கு வாங்கிக்கொண்டு, ''எவ்வளவு பணம் வேண்டும்?'' என்றுர். பழக்காரன் உடனே, ராஜாவே! பணம்

எனக்கு வேண்டாம்; தடி எடுத்து 100 அடி கொடுங்கள்'' என்று பதில் சொன்னான். அரசர்க்கு இது வியப்பாக இருந்தது. அரசர், ''தாராள மாகப் பணம் வாங்கிக்கொள். மாம்பழங்கள் நன்றாயிருக்கின்றன. நிரம்பவும் தேவையாயிருந்த சமயத்தில் எனக்குப் பழங்களைக் கொடுத்த உன்னை எங்ஙனம் அடிக்கக்கூடும்? உனக்குப் பிரத்தியேக மான நான்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ள வேண்டும்'' என்றார். பழக்காரன் மீண்டும் ''அதெல்லாம் வேண்டாம்—என்னை 100 தடவை அடிக்க வேண்டும். எனக்குப் பரம திருப்தி'' என்றான். அங்ஙனமே அரசர் அவனை மெதுவாக அடிக்குமாறு தன் சேவகனை ஏவினார். 50 அடிகள் விழுந்தன. உடனே பழக்காரன் ''இப்போது நிறுத்துங்கள். எனக்குப் பங்காளி ஒருவன் இருக்கிறான். அவனுக்கும் 50 அடிகள் கொடுக்க வேண்டும்'' என்றான். அரசர்க்கு இது வியப்பாய் இருந்தது. வேடிக்கையான மனிதன் அவன்! ''யார் உன் பங்காளி?'' என்று அரசர் கேட்க, பழக்காரன் ''அரண்மனைக்குள் நுழையும்போது வாசல் காப்போன் எனது லாபத்தில் பாதியைப் பங்கிட்டுக் கொடுக்குமாறு விரும்பினான். ஆகையால் அவன் பங்காகிய 50 அடிகளையும் அவன் அடையத்தான் வேண்டும்'' என்றான். அரசர் உடனே வாசல் காப்போனை வரவழைத்து அவனுக்கு 50 அடிகளைக் கடுமையாகக் கொடுக்கும்படி ஆக்ஞாபித்தார். உடனே அவனை வேலையினின்று நீக்கிவிட்டு, பழக்காரனின் யதார்த்த ஒழுக்கத்திற்காகச் சிறந்த சன் மானங்களை அளித்தார்.

உண்மை பேசுவோன் எப்போதும் மரியாதை செய்யப்படுவான். சத்தியம் தனக்குரிய பரிசைக் கொண்டு வரும். சத்தியம் ஓர் சிறந்த குணம்.

எவ்வித வேலையிலும் சத்தியவான் எப்போதும் வெற்றி பெறுவான். சத்தியவானிடம் மக்கள் எப்போதும் நம்பிக்கை வைப்பார்கள்.

பேராசை கொண்டவனை அண்டை வீட்டுக்காரர்கள் பகைத்துக் கொள்வார்கள். அவனுடைய வாழ்க்கை நிம்மதியற்றும் அதிருப்தியாயும் துக்ககரமாயும் இருக்கும். அவன் ஒரு அட்டை அல்லது இராஜாளி போன்றவன். பக்கத்து வீட்டார்களின் இரத்தத்தை உறிஞ்சுகிறான். பிறருடைய சொத்துக்களை அபகரிப்பான். தந்திரங்களினாலும் இழிவான வழிகளாலும் திரவியத்தைச் சம்பாதிப்பான். திரவியமே அவனுடைய கடவுள். பணம் கிடைக்கக் கூடுமானால் பேராசைப்படுவோன் கொலைகூடப் புரிவதில் தயங்கான். பேராசை அறிவை மறைத்துப் பாழாக்குகிறது. சுயநலம், மோசம் செய்தல், தந்திரம், பொய், நயவஞ்சனை ஆகியவைகள் யாவும் பேராசையின் இன்றியமையாத தோழர்கள். யுத்தத்திற்கு மூல காரணம் பேராசை. அவித்தை எனப்படும் மாயையின் செல்லக் குழந்தைதான் பேராசை. அது பச்சோந்தி அல்லது அசுரன் போன்றது. அது பல வண்ணங்களையும் வடிவங்களையும் ஏற்றுக்கொள்ளும். பணத்திற்காகவும் பதவிக்காகவும் அதிகாரத்திற்காகவும், கௌரவத்திற்காகவும் கீர்த்திக்காகவும் பேராசை எழுகிறது. முமுக்ஷுக்களான சாதுக்களிடையிலும் சித்திகளுக்காகவும், தலைமை பதவிக்காகவும், குரு பதவிக்காகவும் சிஷ்யப் பதவிக்காகவும் ஆசிரமம் அமைப்பதற்காகவும் பேராசை உண்டாகிறது. விசாரணை, பகுத்தறிவு, பற்றற்றிருத்தல், ஸத்ஸங்கம், சத்தியம், விரக்தி, தருமம் ஆகியவை மூலம் பேராசையை வேரோடு நசுக்கிவிட்டுப் பேரானந்த ஸாந்தியை அனுபவியுங்கள்.

ஓம் தத் ஸத்.

# 6. ஞானமுள்ள கிழவி

மதப்பற்றும் தரும சிந்தனையும் படைத்த மஹாராஜா ஒருவர் ஒரு பெரிய காட்சிசாலையைத் திறந்து வைத்தார். அதில் எல்லாவித பொருள்களும் இனும் கொடுப்பதற்காக வைக்கப் பட்டிருந்தன. ஆணோ, பெண்ணோ, எவரும் அவரவர் பிரியப்படி எதையும் எடுத்துக் கொண்டு போகலாம். இந்தச் சாலைக்கு நகர மக்கள் அனைவரும் திரண்டு வந்தனர். சிலர் நேர்த்தியான வேஷ்டிகளையும், சிலர் நகைகளையும், விலையுயர்ந்த புத்தகங்களையும் எடுத்துக் கொண்டார்கள். இரும்புப் பெட்டிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. காஷ்மீரிலிருந்து வந்த புதிய பழங்களைச் சிலர் எடுத்துக் கொண்டார்கள். எல்லோருக்கும் பரம திருப்தி. ஆனால் ஞானமுள்ள கிழவி ஒருத்தி அங்கே வந்தாள். எதையும் தொடக்கூடவில்லை. அவளுக்கு அதிருப்தி.

''நகர மக்களுக்கு எல்லாம் திருப்தியாயிற்று. ஒரு கிழவி அதிருப்திப்படுகிறாள். 'இங்குள்ள எந்தப் பொருளும் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. நான் மகாராஜாவைப் பார்க்கவேண்டும்' என்று அக்கிழவி சொன்னாள்'' என்று திவான் மகாராஜா விடம் முறையிட்டான். உடனே யானையின் மேலேறிக் கொண்டு மகாராஜா கிழவியைப் பார்க்க வந்துவிட்டார். கிழவி மன்னரைப் பார்த்து, ''மகாராஜா! கீழே இறங்கி வாரும். வெகு முக்கியமான ஓர் விஷயத்தைப் பற்றித் தங்களிடம் பேச விரும்புகிறேன்'' என்றாள். அரசர் யானையிலிருந்து இறங்கினார். கிழவி மன்னனின் வலது கையைப் பிடித்துக்கொண்டு, ''மகாராஜா! தாங்கள் எனக்குச் சொந்தமாகி

விட்டீர்கள். காட்சிச் சாலையிலுள்ள சின்னஞ்சிறிய பொருள்களையும் விளையாட்டுப் பொம்மைகளையும் நான் விரும்பவில்லை. தங்களைப் பெறவே நான் விரும்புகிறேன். தாங்கள் எனக்குச் சொந்தமான படியால் இந்த ராஜ்யத்தின் செல்வம் அனைத்தும் இப்போது எனக்குச் சேர்ந்ததாகி விட்டது'' என்றாள். மகாராஜாவுக்கு அந்த வார்த்தைகள் ஆச்சரியத்தை விளைவித்தன. அந்தக் கிழவியை அவர் அரண்மனையிலே வைத்துக் கொண்டு சாகும் வரை தாய்போலப் பாதுகாத்து வந்தார்.

பலவித ஆசைகளைக் கொள்வதால் அந்தந்த ஆசைக்குரிய பொருள்களைத் தேடிச் செல்லு கிறீர்கள். இங்ஙனம் செய்வதால் திருப்தியே உண்டாவதில்லை. ஆசைக்கு நீங்கள் அடிமை யாவதால், பிச்சைக்காரர்களுக்கும் பிச்சைக் காரனாக ஆகிவிடுகிறீர்கள். உலக இச்சைகளையும் பொருள்களையும் துறந்து, இப்பரந்த பிரபஞ் சத்தின் மூலம் பரம்பொருளைப் பெற்றுவிட்டால், உங்களுடைய எல்லா ஆசைகளும் பூர்த்தியாகி விடும். ஞானமுள்ள கிழவி எப்படி மகாராஜாவைத் தன்னுடைய சொந்தமாகப் பாராட்டி அவரது செல்வத்திற்கெல்லாம் அதிபதியானாளோ, அப்படியே சகல திவ்ய ஐஸ்வரியங்களும் உங்களைத் தேடிவரும் – நீங்கள் பக்தியாலும் தியானத்தாலும் பகவானை அடைந்துவிட்டால்!

ஸ்ரீகிருஷ்ண பகவான் பிரகலாதாழ்வார் முன் தோன்றி, ''பிரியமுள்ள பிரகலாதா! உன் தவத்திற்குப் பெரிதும் மகிழ்ந்தேன். வேண்டிய வரத்தைக்கேள் தருகிறேன்'' என்றார். பிரகலாதர், ''ஹே பகவானே! பரம்பொருளே! எனக்கு எதுவுமே வேண்டாம். தங்கள் தரிசனத்தினால் எல்லா ஆசைகளும் பூர்த்தியாகி

விட்டன. தங்களை அடைந்த எனக்கு வேறு என்ன வேண்டும்? என் மனம் சாந்தி பெறுகிறது. இப்பிரபஞ்சத்திலுள்ள செல்வம் முழுதும் இப்போது எனக்குச் சொந்தம். என் மனதிலே எந்த வித ஆசையும் முளைக்காதபடி செய்தீர்கள். எவ்வித பற்றும் அற்றவனாகச் செய்யுங்கள். இதுவே எனது மனப்பூர்வமான பிரார்த்தனை. இந்த வரம் மட்டும் தந்து ஆதரியுங்கள்'' என்று பிரார்த்தித்தார்.

## 7. கௌரங்கரும் குஷ்டரோகியும்

கௌரங்க பகவான் பூரிக்குப்போய், கோவிலுள் சென்று ஆண்டவனைத் தரிசித்துத் தமது குடிசைக்குத் திரும்பினார். கௌரங்க பகவானைப் பார்க்கவேண்டுமென்று ஒரு குஷ்டரோகி வெகுகாலம் ஆசைப்பட்டான். கோவிலுக்குப் போனான். அந்தோ! கௌரங்க பகவான் திரும்பி விட்டார். அவரைப் பின்பற்றித் தொடர்ந்து, ''பகவானே! என்னை ஏன் கைவிட்டீர்கள்'' என்று கடுமையாகக் கதறினான். அவன் ஹிருதயம் நிரம்பவும் வேதனையடைய அப்படியே மூர்ச்சித்தான். கௌரங்க பகவானோ நெடுந்தூரம் போயிருந்தார். யாரோ தம்மைக் கூப்பிடுவது போலிருந்தது அவருக்கு. சட்டென்று நின்றார். கோவிலுக்குத் திரும்பிப் போனார். மூர்ச்சித்து வீழ்ந்த குஷ்டரோகியைக் கண்டார். அவரை மெதுவாகத் தூக்கி எடுத்து தமது மார்போடு அணைத்துக் கொண்டார். உடனே குஷ்டரோகம் தீர்ந்து போயிற்று. குஷ்டரோகியாயிருந்தவன், ''பகவானே! தங்களை வழிபட வந்தேன். குஷ்டரோகம் போக்கிக்கொள்ள வரவில்லை. என்னுடைய இந்த குஷ்டரோகம் அநேக பாடங்களைப் போதித்தது. நான் சதா காலமும் கடவுளைப்

விட்டீர்கள். காட்சிச் சாலையிலுள்ள சின்னஞ்சிறிய பொருள்களையும் விளையாட்டுப் பொம்மைகளையும் நான் விரும்பவில்லை. தங்களைப் பெறவே நான் விரும்புகிறேன். தாங்கள் எனக்குச் சொந்தமான படியால் இந்த ராஜ்யத்தின் செல்வம் அனைத்தும் இப்போது எனக்குச் சேர்ந்ததாகி விட்டது'' என்றாள். மகாராஜாவுக்கு அந்த வார்த்தைகள் ஆச்சரியத்தை விளைவித்தன. அந்தக் கிழவியை அவர் அரண்மனையிலே வைத்துக் கொண்டு சாகும் வரை தாய்போலப் பாதுகாத்து வந்தார்.

பலவித ஆசைகளைக் கொள்வதால் அந்தந்த ஆசைக்குரிய பொருள்களைத் தேடிச் செல்லு கிறீர்கள். இங்ஙனம் செய்வதால் திருப்தியே உண்டாவதில்லை. ஆசைக்கு நீங்கள் அடிமை யாவதால், பிச்சைக்காரர்களுக்கும் பிச்சைக் காரனாக ஆகிவிடுகிறீர்கள். உலக இச்சைகளையும் பொருள்களையும் துறந்து, இப்பரந்த பிரபஞ் சத்தின் மூலம் பரம்பொருளைப் பெற்றுவிட்டால், உங்களுடைய எல்லா ஆசைகளும் பூர்த்தியாகி விடும். ஞானமுள்ள கிழவி எப்படி மகாராஜாவைத் தன்னுடைய சொந்தமாகப் பாராட்டி அவரது செல்வத்திற்கெல்லாம் அதிபதியானாளோ, அப்படியே சகல திவ்ய ஐஸ்வரியங்களும் உங்களைத் தேடிவரும்—நீங்கள் பக்தியாலும் தியானத்தாலும் பகவானை அடைந்துவிட்டால்!

ஸ்ரீகிருஷ்ண பகவான் பிரகலாதாழ்வார் முன் தோன்றி, ''பிரியமுள்ள பிரகலாதா! உன் தவத்திற்குப் பெரிதும் மகிழ்ந்தேன். வேண்டிய வரத்தைக்கேள் தருகிறேன்'' என்றார். பிரகலாதர், ''ஹே பகவானே! பரம்பொருளே! எனக்கு எதுவுமே வேண்டாம். தங்கள் தரிசனத்தினால் எல்லா ஆசைகளும் பூர்த்தியாகி

விட்டன. தங்களை அடைந்த எனக்கு வேறு என்ன வேண்டும்? என் மனம் சாந்தி பெறுகிறது. இப் பிரபஞ்சத்திலுள்ள செல்வம் முழுதும் இப்போது எனக்குச் சொந்தம். என் மனதிலே எந்தவித ஆசையும் முளைக்காதபடி செய்தீர்கள். எவ்வித பற்றும் அற்றவனாகச் செய்யுங்கள். இதுவே எனது மனப்பூர்வமான பிரார்த்தனை. இந்த வரம் மட்டும் தந்து ஆதரியுங்கள்'' என்று பிரார்த்தித்தார்.

# 7. கௌரங்கரும் குஷ்டரோகியும்

கௌரங்க பகவான் பூரிக்குப்போய், கோவிலுள் சென்று ஆண்டவனைத் தரிசித்துத் தமது குடிசைக்குத் திரும்பினார். கௌரங்க பகவானைப் பார்க்கவேண்டுமென்று ஒரு குஷ்டரோகி வெகுகாலம் ஆசைப்பட்டான். கோவிலுக்குப் போனான். அந்தோ! கௌரங்க பகவான் திரும்பி விட்டார். அவரைப் பின்பற்றித் தொடர்ந்து, ''பகவானே! என்னை ஏன் கைவிட்டீர்கள்'' என்று கடுமையாகக் கதறினான். அவன் ஹிருதயம் நிரம்பவும் வேதனையடைய அப்படியே மூர்ச்சித்தான். கௌரங்க பகவானோ நெடுந்தூரம் போயிருந்தார். யாரோ தம்மைக் கூப்பிடுவது போலிருந்தது அவருக்கு. சட்டென்று நின்றார். கோவிலுக்குத் திரும்பிப் போனார். மூர்ச்சித்து வீழ்ந்த குஷ்டரோகியைக் கண்டார். அவரை மெதுவாகத் தூக்கி எடுத்து தமது மார்போடு அணைத்துக் கொண்டார். உடனே குஷ்டரோகம் தீர்ந்து போயிற்று. குஷ்டரோகியாயிருந்தவன், ''பகவானே! தங்களை வழிபட வந்தேன். குஷ்டரோகம் போக்கிக்கொள்ள வரவில்லை. என்னுடைய இந்த குஷ்டரோகம் அநேக பாடங்களைப் போதித்தது. நான் சதா காலமும் கடவுளைப்

பற்றிச் சிந்திப்பேன். எனக்கு இரக்கமுள்ள இருதயம் உண்டு. எனக்கு அடக்கம் உண்டு. உண்மை எது, பொய் எது என்று பகுத்தறிகிற சக்தி என்னிடம் உண்டு. எனக்கு எந்தவித ஆசையும் இல்லை, என்னுடைய வியாதி தீர்ந்து போனால், மீண்டும் ஒருகால் கர்வம் படைத்த வனாகிக் கடவுளை மறந்துவிடுவேனோ என்ற பயம் ஒன்று எழுகிறது'' என்று கண்ணீரைத் தாரை தாரையாக விட்டுக் கொண்டு கதறியழுதான்.

பொதுவாக, உலகத்திலே, மக்கள் தீராத பெருவியாதியால் துன்பப்படுகிறபோதும், வயிற்றுக்கு ஆகாரம் எதுவும் கிடைக்காதபோதும், தம்முடைய, அருமை மகன் அல்லது மகள் இறந்த போதும், பகவானைப் பற்றிச் சிந்திப்பார்கள். அவர்களுடைய பெருவியாதி தீர்ந்துபோய், தொந்தி தொப்பையுடன் உடல் கொழுத்தால் உடனே கடவுளை மறந்து விடுவார்கள். இதுதான் மாயை. நீங்கள் ஆரோக்கியமாயுள்ளபோதும், நல்ல தனசம்பத்துக்களுடனிருக்கும் போதும் கடவுளை நினைத்தால், உங்களுக்கு எந்தவித தொந்தரவும், வலியும், வேதனையும் உண்டாக மாட்டாது. வலி அல்லது வேதனை என்பது ஹிருதய சுத்தி செய்யும் பெரிய மருந்து. மறைமுகமாயுள்ள ஆசீர்வாதம் அதுவே ஆகும்.

# 8. கல்லுராம்

கல்லுராம் பரம ஏழை. ஒரு நாள் அவன் குருநானக் அவர்களை விருந்துக்கு அழைத்தான். அழைப்புக்கு இணங்கினர் குரு. குறிப்பிட்ட நாளில் கல்லுராம் வீட்டிற்குக் குரு சென்றார். கதவு தாளிடப்பட்டிருந்தது. கதவைத் தட்டினர். சிறிது நேரம் கழிந்த பிறகே கதவு திறக்கப்பட்டது. கல்லுராம் மிக்க பணிவாக, ''குருதேவரே! தட்டினவுடன் கதவைத் திறக்காததற்கு மன்னியுங்கள்'' என்று பிரார்த்தித்தான். குருதேவர் ''என்னுடைய அருமையான சகோதரா! என்ன செய்து கொண்டிருந்தாய்?'' என்று வினவினர். ''குருஜீ! சுவற்றில் ஆணிகளை அறைந்து கொண்டிருந்தேன்'' என்று விடை பகர்ந்தான்.

''சகோதரா ! என்ன செய்து கொண்டிருந்தாய்? சுவற்றில் ஆணிகளை அறைந்து கொண்டா இருந்தாய்? என் பின்னல் வா'' என்று அழைத்தார் குரு. கல்லுராம் உடனே ''தங்கள் உத்தரவு என் பாக்கியம். இதோ வருகிறேன்'' என்றான். தன் சொத்துக்களையும் குழந்தைகளையும் விட்டுவிட்டு அப்பரம ஏழை குருநானக் அவர்களைத் தொடர்ந்து சென்றான். கல்லுராம் குரு சொல்படி ஆத்மீய போதனைகளைப் பயின்று, இறுதியில் குரு நானக் அவர்களின் அன்புக்குரிய மாணவனுக ஆகிவிட்டான்.

இச்சமயத்தில்கூட, தயாள குணம் படைத்த குருவினது இனிய குரலோசை எழுந்து, ''என்ன செய்து கொண்டிருக்கிருய் ? சுவற்றில் ஆணிகளை அறைந்து கொண்டா இருக்கிருய் ? என்ன செய்து கொண்டிருக்கிருய் ? இன்னமும் சம்சராம் என்னும்

சகதிக்குள் வீணுக அழுந்தவா? என்ன செய்து கொண்டிக்கிருய்? வாழ்க்கையை இன்னமும் உண்பதிலும், குடிப்பதிலும், புகைப்பதிலும், சீட்டாடுவதிலும், களி வெறியாடுவதிலும் வீணுக்கிக்கொண்டா இருக்கிருய்? வாழ்க்கையின் குறிக்கோள் என்ன என்பதையும், ஆத்மா என்ருல் என்ன என்பதையும், ஆத்ம சாக்ஷாத்காரத்தின் மஹிமையும் சோபையும் என்ன என்பதையும் இன்னமும் மறக்கவா செய்கிருய்?'' என்று கேட்பது போலிருக்கிறது.

என்ன பரிதாபகரமான நிலே! என்ன வருந்தத்தக்க நிலே! தயாள குணம் படைத்த தலேவர் இன்று நம்மெல்லோரையும் பார்த்து, ''சகோதரா! என்ன செய்து கொண்டிருக்கிருய்? சுவற்றில் ஆணிகளே அறைந்து கொண்டா இருக்கிருய்?'' என்று வினவினுல், உங்களுடைய விடை என்ன? பரம ஏழையான கல்லுராம் கூறியதுபோல், ''கருணேக் கடலான குருவே! நாம் பலவீனர்கள். எமக்கு திடசித்தமோ அல்லது திட நம்பிக்கையோ கிடையாது. எமக்கு நன் மார்க்கம் தெரியவில்லே. எம்மிடம் பக்தியோ தூய்மையோ இல்லே. நமது மனதிலெல்லாம் அழுக்குகளும், ஆசைகளும் நிறைந்துள்ளன. நாங்கள்கூட தங்களேப் பின்பற்றுகிறோம். எங்களே ஆசீர்வதியுங்கள். பரகதிக்கு உயர்த்துங்கள். ஆவேசத்தை ஊட்டுங்கள். துயரம் தோய்ந்த லௌகிக வாழ்க்கையினின்று பாரமார்த்திகப் பெருவாழ்க்கைக்குத் தாங்கள் வழி காட்டுங்கள். பாதுகாக்க வேண்டுகிறோம். ஈஸ்வர சாக்ஷாத் காரம் பெறுவதற்குத் துணே புரியுங்கள்'' என்று உண்மையான பக்தி சிரத்தையுடன் கூற மாட்டோமா?

# 9. ஓர் சக்கிலிய மஹான்

பாடலிபுத்திரா எனும் க்ஷேத்திரத்தில் முன்னொரு காலத்தில் ஓர் சக்கிலிய மஹான் வசித்து வந்தார். மிதியடிகளை தைத்துக் கொடுப்பதில் ஒரு சில காசுகளைச் சம்பாதிப்பார். வருமானத்தில் முக்கால் பாகத்தை ஏழைகளுக்குத் தானம் வழங்கி, எஞ்சியதைத் தமக்கென வைத்துக் கொள்வார். அவர் ஓர் ராம பக்தர். ராம நாமத்தை தினந் தோறும் 4 லக்ஷம் ஜபம் பண்ணுவார். மூன்று மணி நேரம் தூங்குவார். அவர் மஹான் என்று யாருக்கும் தெரியாது.

ஓர் நாள் ஒரு யாத்திரீகர் தமது மிதியடிகளைக் கொடுத்தார். சக்கிலிய மஹான் அவற்றைச் சீர்த்திருத்திக் கொடுத்தார். யாத்திரீகர், ''அப்பா! நான் காசிக்குச் சென்று கங்கா ஸ்நானம் பண்ணப் போகிறேன்'' என்றார். உடனே சங்கிலிய மஹான், ''மரியாதைக்குகந்த மஹாப் பிரபுவே! நான் காலணா தருகிறேன். கங்காதேவி ஜலமட்டத்திற்கு மேல் கையைத் தூக்கினால், வலது கையில் காலணாவைத் தயவு செய்து கொடுங்கள்'' என்றார். இதைக் கேட்ட யாத்திரிகருக்கு ஒரே வியப்பாகத் தோன்றியது. எனினும் இதற்குச் சம்மதித்துக் காலணாவைப் பெற்றுக்கொண்டு காசிக்கு நேராகச் சென்றார்.

யாத்திரீகர் காசிக்குச் சென்று கங்கையில் ஸ்நானம் செய்தான பிறகு, சங்கிலியனைப் பற்றி நினைத்தார். நினைத்தவுடனே வலது கை ஒன்று கங்கா தீர்த்தத்திற்கு மேலே தோன்றியது. யாத்திரீகர் காலணாவை அக்கையில் கொடுத்து விட்டு நடக்கலானார். அப்போது ''இவ்வளவு

சீக்கிரத்தில் ஏன் ஓடிப் போகிறீர்? வைரக் கற்களால் பதிக்கப்பட்ட விலையுயர்ந்த தங்க வளையல் இதோ பெற்றுக்கொள்ளும் — சக்கிலியனிடம் போய் எனது பிரசாதமாகக் கொடும்'' என்று ஓர் அசரீரியின் குரல் கேட்டது. யாத்திரீகர் அப் பொன் வளையலைப் பெற்றுக் கொண்டு, கயை என்ற புண்ணிய க்ஷேத்திரத்திற்குச் செல்லலானார். பேராசை பிடித்தது அவரை. ''இதைச் சக்கிலியனிடம் ஏன் கொடுக்க வேண்டும்? யாரிடமாவது விற்றுப் பணத்தை எடுத்துக் கொள்ளுகிறேன்'' என்று எண்ணமிட்டவாறே, கடைக்குப் போய் அதை விற்க முயன்றார். ''இது மிகவும் விலையுயர்ந்த வளையல். போதுமான பணம் என்னிடம் இல்லை. இதை விலைக்கு வாங்க என்னால் இயலாது, வேறு ஒருவரிடம் போங்கள்'' என்றான் ஒரு வியாபாரி. யாத்திரீகர் பல பேரிடம் வளையலைக் காட்டினார். விற்க முடியவில்லை. கடைசியில், ஒரு மஹாராஜாவின் திவானிடம் அதைக் கொண்டு போய்க் காட்டினார். வளையலைக் கண்டவுடனே, ''மகாராணிக்காக வாங்குவார் மகாராஜா'' என்று கருதிய வண்ணம், அதைக் கொண்டு போய் மகாராஜாவிடம் கொடுத்தார் திவான். மகாராஜாவோ அதை நேராக மகாராணியிடம் கொடுத்தார். பேரெழில் வாய்ந்த அப் பொன் வளையலை மகாராணி பெரிதும் விரும்பினாள். யாத்திரீகருக்கு நான்கு லக்ஷம் ரூபாய் கொடுக்கப்பட்டது. அவருக்கோ ஆனந்தம் அபாரமாய்ப் பொங்கிவிட்டது. அழகான பங்களா ஒன்றை வாங்கினார்; யௌவனம் தவழும் மங்கையை மணந்தார்; பல ஆட்களை வேலைக்கு வைத்துக் கொண்டார். அந்த யாத்திரீகர் ஓர் இளவரசனைப் போன்று சுக வாழ்க்கையில் மூழ்கி மகிழ்ந்து கொண்டிருந்தார்.

வலது கைக்கு அலங்காரம் அளித்தது போல, இடது கைக்கும் அலங்காரம் வேண்டுமல்லவா? மகாராணி மகாராஜாவிடம் விண்ணப்பித்தாள். மகாராஜா யாத்திரீகரைத் தேடினார். யாத்திரீகர் வந்ததும், மகாராஜா, ''ஐயா! தாங்கள் கொடுத்த வளையல் ரொம்பவும் உயர்ந்தது. நேர்த்தியானது. மகாராணியின் இடது கைக்கும் ஒரு வளையலைக் கொடுங்கள்'' என்று கேட்டார். அந்த யாத்திரீகர், ''என்னிடம் அது ஒன்றுதானிருந்தது. மற்றொன்றுக்கு நான் எங்கே போவது?'' என்றார். மகாராஜாவுக்குக் கோபம் வந்து விட்டது. ''ஒரு மாத கொடுவுக்குள், நீர் மற்றொரு வளையலைக் கொடுக்கா விட்டால், உம்மைச் சிரசாக்கினை செய்வேன்'' என்று உத்தரவிட்டார்.

யாத்திரீகருக்குத் திகிலும் கவலையும் சூழ்ந்து கொண்டன. துக்கமயமாய்த் தமக்குள், ''அந்தச் சக்கிலியனை நான் எப்படிப் பார்ப்பேன்? அவனை வஞ்சித்து விட்டேன். அவன் ஓர் பெரிய பக்தன் போலல்லவா தோன்றுகிறான்! எப்படியானாலும் அவனிடம் உண்மையக் கக்கிவிடுகிறேன். என்னை மன்னிப்பான். கங்காதேவியின் திருவருளினால் எனக்கு மற்றொரு வலையலைக் கொடுப்பான்'' என்று எண்ணமிட்டார். நேராக பாடலிபுத்திரா க்ஷேத்திரத்தை நாடி, சக்கிலிய மஹானைத் தேடிக் கண்டு பிடித்தார்.

உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி உரைத்தார். சக்கிலிய மஹான் புன்முறுவல் கொண்டார். ''கங்கா தேவியின் வலது கையில் காலணாவைத் தந்தீர்களா?'' என்றார். யாத்திரீகர் நடந்த விபரங்களை நவின்றார். யாத்திரீகர் கண்ணீர் விட்டுக் கதறியழுது, சக்கிலிய மஹானின் கால்களைப் பிடித்து வேரற்ற மரம்போல விழுந்து

சரணுகதியடைந்தார். ''மஹானுபாவரே! என்னை மன்னியுங்கள். தாங்கள் ஒரு பெரிய மஹான். சிரசாக்கினைக்கு உட்பட்டவனுய்த் தவிக்கிறேன். மற்றொரு வளையலைக் கொடுங்கள்'' என்று கெஞ்சினுன். அதற்கு அச்சக்கிலிய மஹான், ''தோலும் நீரும் உள்ள இந்த தகரப் பாத்திரத்தில் கையை நுழைத்து, உங்களுக்கு வேண்டிய வளையல்களை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்ருர். யாத்திரீகர் ''எனக்கு ஒன்றே போதும்'' என்று கூறி ஒரு வளையலை எடுத்துக் கொண்டார். மஹானிடம் விடை பெற்றுக் கொண்டு, மகாராஜாவிடம் போய் வளையலைக் கொடுத்தார்.

மகாராஜாவுக்கு மட்டற்ற வியப்பாகப் போயிற்று. அதை மகாராணியிடம் கொடுத்தார். யாத்திரீகரை, ''உமக்கு இந்த வளையல் எங்கே கிடைத்தது?'' என்று கேட்கவே, உண்மையைச் சொல்லி விட்டார் யாத்திரீகர். பிறகு மகாராஜாவும் யாத்திரீகரும் பாடலிபுத்திரா என்னும் க்ஷேத்திரத்திற்குப் போய், மஹானைத் தரிசித்தார்கள். மகாராஜா அந்தச் சக்கிலிய மஹானைப் பார்த்து, ''தங்களிடம் இன்னும் வளையல்கள் இருக்கிறதா?'' என்று வினவ, அதற்கு மஹான் ''எவ்வளவோ இருக்கிறது. தகரப் பாத்திரத்தில் கையை விட்டால், வேண்டிய வளையல்களை எடுத்துக் கொள்ளலாம்'' என்ருர். உடனே மகாராஜா தகரப் பாத்திரத்தில் கையை விட்டு 50 வளையல்களை எடுத்துக் கொண்டார். ஒரு க்ஷண நேரத்தில் அப் பாத்திரத்தில் மீண்டும் 50 வளையல்கள் நிறைந்து விட்டன. மீண்டும் மகாராஜா 50 வளையல்களை எடுத்துக்கொண்டார். மறுபடியும் பாத்திரம் 50 வளையல்களால் நிரம்பியது. மகாராஜாவுக்கும் யாத்திரீகருக்கும் ஒரே வியப்பாகி விட்டது. மகாராஜா தமக்குள்,

''சக்கிலியன் ஒரு பெரிய மஹான். தினசரி அணுக் கணக்கில் சம்பாதித்தாலும் மிகுந்த சந்தோஷத் துடன் இருக்கிறான். உலகத்திலுள்ள செல்வம் அனைத்திற்கும் இவர் அதிபதியாய் இருக்கிறார். இந்தப் பெரிய ராஜ்யத்தை ஆளுவதில் என்ன பிரயோஜனம்? கவலைகளும் ஆத்திரங்களும் என்னைப் பிடுங்கித் தின்கின்றன. இந்தப் பெரிய மஹானுக்கு நான் சிஷ்யனாகி விடுகிறேன். ஈசுவர தர்சனத்தைப் பெறுவேன்'' என்றெல்லாம் எண்ணமிட்டார்.

மகாராஜாவின் உள்ளத்தில் மகத்தான வைராக்கியம் உதித்தது. உடனே ராஜ்யத்தைத் துறந்துவிட்டு அந்தச் சக்கிலிய மஹானுக்குச் சிஷ்யர் ஆனார். அம்மஹான் அரசர்க்கு ராமதாரக மஹா மந்திரத்தின் மர்மங்களை உபதேசித்தார். புதிய ராஜாவோ உண்மைச் சிஷ்யனுக்கு உரிய பயபக்தி விசுவாசத்துடன் இடைவிடாமல் ராம மந்திர ஜபம் பண்ணினார். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியைத் தியானித்தார். இறுதியில், ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி தரிசனத்தையே பெற்றார். யாத்திரீகரும் தமது செல்வத்தைத் துறந்து மஹானுக்குச் சிஷ்யர் ஆனார்.

பக்தி சிரத்தையுள்ளவன் எவனும் பகவானை அடையக்கூடும். ஒருவன் பக்தி செலுத்தினால் அதிலே ஆண்டவனுக்கு அலாதி விருப்பம். அந்த மனிதனுடைய ஜாதி, மதம், குலம், பதவி முதலியவற்றையும் கடவுள் பார்க்க மாட்டார். எந்த வேலை செய்துகொண்டிருந்தாலும் சரி, அவன் கடவுளிடத்தில் பக்தியும், விரக்தியும், சிரத்தை யும், மனத்தூய்மையும் உள்ளவனாய் சதாகாலமும் கடவுளை மறக்காமல் அவன் நாமத்தையே உச்சரித்துக் கொண்டிருந்தால் ஈஸ்வர ஞானத்தை

யாருமே பெறலாம். சக்கிலிய மஹான் பாதரட்சைகளைத் தைத்துக் கொடுத்து வயிறு வளர்த்தாலும்கூட, கடவுளிடத்தில் சதா வாழ்ந்து வரலானுர். உண்மையான நீடித்த சந்தோஷத்தை செல்வம் உனக்குக் கொடுக்காது. நித்தியத்துவ மெனும் தேவாமிருதத்தைப் பருகும் பொருட்டு, மகாராஜா பெரியதோர் ராஜ்யத்தையே துறக்கலா னுர். ஆகையால் செல்வத்திற்காகவும் பதவிக் காகவும் ஓடாதீர்கள். உங்களுக்கு கிடைத்த வற்றிலே திருப்தி அடையுங்கள். கடவுளின் நாம தியானத்தில் மூழ்குங்கள். உங்களுடைய தினசரி வாழ்க்கைக் கடமைகளை ஈஸ்வரார்ப்பணமாக ஆற்றுங்கள். இவ்வுலகிலிருக்கும்போதே, பல்வேறு காரியங்களில் ஈடுபட்டிருக்கும்போதே, நீங்கள் கடவுளை அடையக்கூடும். கீதையின் மூல உபதேசமும் இதுவே ஆகும்.

— ஓம் தத் ஸத் —

# 10. கோபாலனும் கோவிந்தனும்

ஓர் ஊரில் பணக்காரன் ஒருவன் இருந்தான். கோபாலனும், கோவிந்தனும் அப்பணக்காரனிடம் வேலை பார்த்து வந்தார்கள். பணக்காரன் சொன்ன எல்லாக் காரியங்களையும் மனமொத்துச் செய்து வந்தார்கள். அவனுக்குப் பூர்ண திருப்திதான் இவ்விரண்டு வேலைக்காரர்கள் மீது. ஆனுல் கூலிப்பணம் கொடுத்ததே கிடையாது. முன் சேமித்து வைத்திருந்த பணத்தைச் செல வழித்து வாழ்க்கை நடத்தினுர்கள் இரண்டுபேரும்.

சொத்துக்களையெல்லாம் வாரிச் சுருட்டிக் கொண்டு பணக்காரன் ஒரு நாள் காணுமற் போய் விட்டான். கோபாலனும் கோவிந்தனும் யௌவன

வாலிபர்கள். கடல் கடந்து ஓர் தீவுக்குப் போய் அங்கே ஓர் பிரபுவிடம் வேலைக்கு அமர்ந்தார்கள். அப்பிரபு அவ்விருவருக்கும் இரண்டு வீடுகளையும், பத்து பசுக்களையும், இரண்டு ஏக்கர் நிலங்களையும் கொடுத்து, ''அன்புள்ள வாலிபர்களே! சந்தோஷமாக வாழுங்கள்'' என்று ஆசீர்வதித்தான். தனித்தனியாக அவ்வாலிபர்கள் வாழலானார்கள். கோபாலன் தனக்குக் கிடைத்த ஐந்து பசுக்களின் பாலை தன் உபயோகத்திற்கு வைத்துக் கொண்டது போக மீதியை ஏழைகளுக்கும் விருந்தாளிகளுக்கும் தர்மம் பண்ணினான். அவன் தன்னுடைய நிலத்தை நன்கு உழுது பழ மரங்களைப் பயிர் செய்தான். சில வருஷங்களிலே பழ மரங்கள் நல்ல பலன் கொடுக்கத் தொடங்கின. அவன் வாய் கொண்டமட்டும் பழங்களைத் தின்றான். ஏழைகளுக்கும் அக்கம்பக்கத்திலுள்ளோர்களுக்கும், விருந்தாளிகளுக்கும் வாரி வாரி வழங்கினான். இங்ஙனம், அவன் சந்தோஷகரமான வாழ்க்கையை நடத்தலானான்.

கோவிந்தனோ கெட்ட சினேகிதர்களுடன் கூடி தீய நடவடிக்கைகளில் ஈடுபட்டுப் பெரிய திருடன் ஆனான். கையும் களவுமாகப் பிடிபட்டு கோவிந்தன் பலவாறாக அடியுண்டான். நன்செய் நிலம் அவனுக்கும் உண்டு; நல்ல விளைச்சல். ஆனால் ஒரு துரும்பு அரிசியும் அன்பர்களுக்கு வழங்கியதே கிடையாது. எல்லாவற்றையும் அவனே வைத்துக் கொண்டான். சுயநலமும், பேராசையும், போக்கிரித்தனமும் உருவெடுத்தவனானான். அவன் நட்ட மரங்களில் பழங்கள் சுவையற்றவை யாயிருந்தன.

பிரபு ஒரு நாள் கோபாலனைப் பார்த்து, ''கோபால்! அன்புள்ளவனே! முன் நீ வேலை

பார்த்து வந்த பணக்காரன் — ஊரை விட்டுப் போனவன் — நான்தான். படகிலேறி ஓர் இரவில் இத்தீவுக்கு வந்து சேர்ந்தேன். நீங்கள் இருவரும் இதே தீவுக்கு வந்து சேர்ந்தீர்கள். என்னை நீங்கள் அடையாளம் கண்டு கொள்ளாவிட்டாலும், உங்களை நான் தெரிந்து கொண்டேன். உங்களுக்குப் பசுக்களும், வீடுகளும், நிலங்களும் கொடுத்தது நீங்கள் முன் செய்த வேலைக்காக, உங்களிருவருடைய குணத்தையும், மனப்பான் மையையும் அறிந்து கொள்வதற்காகவே தனியே வசிக்கும்படி உத்திரவிட்டேன். இப்போது நீ என்னுடன் வசிக்கலாம். நல்ல குணமும் சுறு சுறுப்பும் உள்ளவன். உன் சிநேகிதன் துன்மார்க்கன். தீய காரியங்களைச் செய்கிறான். அவன் தனியே இருக்கட்டும்'' என்று விரிவாகக் கூறிவிட்டு, கோபாலனைத் தனது சகோதரன் போலப் பாவித்து வரலானான். கோபாலன் ஜமீன்தார் ஆனான்.

கோவிந்தன் இச்செய்தியைக் கேட்டு அவமான மடைந்தான். நாளடைவில் அவன் பழைய கெட்ட பழக்க வழக்கங்களை விட்டுவிட்டான். சில வருஷங் களில், கோவிந்தனும் திருந்தி நல்லவனானான்.

பிரபு போன்று இருப்பவர் கடவுள். இரண்டு வாலிபர்கள் இரண்டு ஜீவர்கள் — தீய, தூய மனப் பான்மை படைத்தவர்கள். ஜீவர்கள் தூய காரியங் களையும் தீய காரியங்களையும் செய்கின்றனர். பணக்காரனுக்காக இரு வாலிபர்களும் செய்த சேவைகளுக்கு இக்காரியங்கள் உபமானமாகக் கூறலாம். வாலிபர்கள் கூலி பெறவில்லை. ஜீவர்கள் இந்த ஜன்மத்தில் செய்த காரியங்களின் பலன்களை இந்த ஜன்மத்திலேயே அனுபவிக்க முடியாது என்பதை இது விளக்குகிறது. முன் சேர்த்து

வைத்த பணத்தை வைத்துக்கொண்டே அவ்வாலிபர்கள் வாழ்க்கை நடத்தினார்கள். இதிலிருந்து, முன் ஜன்மத்தில் செய்த செயல்களின் விளைவுகளையே அவர்கள் இந்த ஜன்மத்தில் அனுபவித்தார் என்ற கோட்பாடு விளங்குகிறது. ''செயல்களின் பலாபலன்களை அளந்து கொடுப்பவர் யார்?'' என்று வினவிய போது, ஜீவர்களுக்கு கடவுளின் ஸ்வபாவத்தை உணர்ந்து கொள்ள முடியாமல் போகிறது. ஒரு நாள் பணக்காரன் காணாமல் போன சம்பவத்திற்கு இக்கருத்தை ஒப்பிடலாம்.

கடல் கடந்து தீவை அடைந்தார்கள். ஜீவன் இந்த உடலை விட்டு வேறு உடலை ஏற்றுக் கொள்வதை இது குறிக்கிறது. பிரபு வாலிபர்களுக்கு வீடுகளும், பசுக்களும் கொடுத்த சம்பவத்தை ஜீவர்கள், முன் ஜென்மத்தில் செய்த வினைகளுக்கு தக்க பலன்களை கடவுள் இந்த ஜென்மத்தில் அளிக்கிறார் என்பதற்கு ஒப்பிட்டுக் கூறலாம். பையன்கள் பசுக்களின் துணையோடு வாழ்ந்தார்கள். இதை ஜீவர்கள் இந்த உடல், உள்ளம், புலன்கள் வாயிலாக இன்ப துன்பங்களை அனுபவிக்கிறார்கள் என்பதற்கு ஒப்பிட்டுக் கூறலாம்.

நல்ல பையன் வயலை உழுது, பழ மரங்களைப் பயிர் செய்தான்; தண்ணீர் பாய்ச்சினான். பழங்களையும் பாலையும் அருகிலிருந்தவர்களுக்கும் விருந்தாளிகளுக்கும் விநியோகித்தான். இதை நற்குணம் படைத்த (சுபவாசனைகளுடன் கூடிய) ஜீவனுக்கு ஒப்பிடலாம். சுபவாசனையுடன் கூடியவன் தன்னலமற்ற சேவையின் மூலம் தன் உள்ளத்தில் பக்தியின் விதையை நடுகிறான்; சாஸ்திர விசாரணை எனும் தண்ணீரைக் கொண்டு

அந்தக் கரணமாகிய வயலை நிரப்பி பண்படுத்து கிறான்; தீய வ்ருத்திகள், தீய மனப்பான்மைகள் ஆகிய களைகளைப் பிடுங்கி எறிகிறான்; ப்ரஹ்மாகார வ்ருத்தி எனும் விருக்ஷத்தை வளர்க்கிறான்; ஆத்மானந்தமாகிய பழத்தைப் புசிக்கிறான்; பிறர்க்குப் போதிப்பதன் மூலம் ஆத்மானந்தமாகிய பழங்களை அவர்களுக்கும் புசிக்கக் கொடுத்தவனா கிறான்; இறுதியில், அவன் பிரஹ்மனோடு இரண்டறக் கலக்கிறான்; ஆத்ம சாக்ஷாத்காரம் பெறுகிறான். இங்ஙனம் அவன் ஜமீந்தார் ஆகிறான்; அதாவது பிரஹ்மனுக்வே ஆகிறான். சுவையற்ற பழங்களை கோவிந்தன் தின்கிறான்; தீய செயல்களைப் புரிந்து துன்பமடைகிறான். அதாவது, அசுபவாசனைகளுடன் கூடிய துர்க்குண முள்ள ஜீவன் காமம், குரோதம் ஆகிய விருக்ஷங்களை வளரச் செய்து பிறர்க்குத் தீங்கிழைத்து, இந்திரிய நுகர்வு இன்பங்களைத் துய்த்துத் தன்னையே அழித்துக் கொள்கிறான், அஞ்ஞானத்தாலும், ஆத்ம ஞானம் இன்மையாலும்.

கெட்ட மனங்கொண்ட கோவிந்தன் தனக் காகவே நெல்லைப் பதுக்கி வைத்தான். இதனால், பல கர்மங்களைப் புரிந்து அவனது ஸஞ்சிக் கர்மாக்கள் வருகிற ஜன்மத்தில் பலனளிக்கட்டும் என்ற கருத்து விளங்குகிறது. அவன் தன் சிநேகிதனின் நிலையை அறிந்து, அவனைப்போல் ஆக முயற்சிக்கிறான். பிரஹ்மனைப் பற்றிய ஸ்வபாவம் இன்னது என்பதை முனிவர்கள் மூலமும் சாஸ்திரங்கள் வாயிலாகவும் அவன் கேள்விப் படுகிறான் என்று இதிலிருந்து அர்த்தமாகிறது.

அவன் தீய செயல்களை விட்டான். அதாவது, அவன் மஹாத்மாக்களுடன் ஸத்ஸங்கம் வைத்துக் கொண்டு, அவர்கள் மூலம் மோக்ஷத்திற்குச்

சாதனங்களாகிய விவேகம், வைராக்கியம், ஷட்ஸம்பத்து, முமுக்ஷுத்வம் ஆகிய நான்கையும் உணர்ந்து, இடையருத் தியானம் புரிந்து ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்ருன் என்பதாம்.

# 11. பணக்காரனும் ஏழையும்

ஒரு ஏழை. எல்லோரும் அவனை நேசித்தார்கள். அவனும் அன்புடன் ஒழுகி வந்தான். பிரார்த்தனை, தியானஞ் செய்து சாந்தியாய்க் காலங்கழித்தான். பேசும்போதெல்லாம், உதட்டில் ஓர் புன்முறுவல் சோபிக்கும். தான் ஒரு பணக்காரனுகி விட்டால்! ஒருநாள் காட்டுக்குப்போய் ஓர் கிழவரைப் பார்த்தான். ''நான் உனக்கு பணம் தந்து பணக்காரனுகச் செய்கிறேன். ஆனுல் ஒரே ஒரு நிபந்தனை'' என்ருர் கிழவர். ''என்ன நிபந்தனை'' என்று கேட்டான் ஏழை. கிழவரோ, ''உன் அன்பு மயமான இருதயத்தை எனக்கு அர்ப்பணி'' என்று கூறினுர். ''பின் நான் எப்படிப் பிழைக்கிறது?'' என்று கேட்டான், அவன். கிழவர், ''என்னிடம் அற்புதமான ஒரு கல் இருதயம் இருக்கிறது. உன் இருதயத்தை எடுத்து விட்டு, அந்த இடத்தில் கல் இருதயத்தை அமைத்து விடுகிறேன். மாம்ஸத்தாலான இருதயம் போலவே இந்த இருதயமும் உழைக்கும்'' என்ருர். ஏழை ஒப்புக் கொண்டான். கிழவர் ஒரு மந்திரத்தை ஏவினுர். உடனே ஏழையின் இருதயம் நீங்கப்பெற்று கல் இருதயம் வைக்கப்பெற்ருன். அதற்குப் பதிலாக வீடு வந்து பார்த்த போது, பணம் பணமாக வருகிறதைப் பார்த்தான். பணக்காரன் ஆகிவிட்டான். எதைத் தொட்டாலும், தங்க மயமாகி விடுகிறது. ஆனுல் மனிதனையோ மஹேஸ்வரனையோ எவரையும் நேசிக்கமுடியாமல்

இருந்ததை உணர்ந்தான். கோபம் வந்தது. பின்னல் அந்த ஏழை, மனிதனையும் மஹேஸ் வரனையும் நேசிக்காத வாழ்க்கை ஒரு வாழ்க்கையா என்றும், இது ஆசி அல்ல என்றும், ஆனல் சுமை என்றும் உணரலானன்.

வாழ்க்கை நெறியில் செல்லுகிறவர்களில் அநேகருக்கு கல் நெஞ்சம் படைக்கப்பட்டுள்ளது. சுற்று முற்றும் பாருங்கள். எத்தனை பேர் உலகத் திலுள்ள வீண் ஆடம்பரங்களையும், பணத்தையும், பதவியையும், கியாதியையும், பொன்னையும், பேராசையையும், நாஸ்திகத்தையும் கைக்கொள்ளு கின்றனர். வாழ்க்கையின் அழகைத் தவற விடு கின்றனர். நசிகேதுவிடம் யமன், ''பரத்துக்குச் செல்லும் மார்க்கம், பணச் செருக்கினல் மூடப்பட்ட மூடப் பணக்காரனல் காண முடியாது. இதுதான் உலகம்'' என்று சொன்னர். மேலும் யமன், ''அதனல் தான் என் பாசத்துக்கு அடிக்கடி உள்ளாகிருர்கள்'' என்ருன். அன்புள்ள சகோதரர்களே! கருணை நிறைந்த இருதயத்தின் சக்தியை வலுப்படுத்திக் கொள்க. அன்பு நெறியில் நடந்து செல்க.

# 12. ராகவனும் அவன் மனைவியும்

தென்னிந்தியாவிலே சிதம்பரத்தில் வசித்து வந்த ஜமீந்தாரின் மகன் ராகவன், மாயவரத்திலுள்ள ஜமீந்தாரின் மகள் பங்கஜத்தை மணந்து கொண்டான். சில வருடங்கள் அவர்கள் இன்பகரமாய் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்கு மூன்று பிள்ளைகளும், இரண்டு பெண்களும் உதித்தார்கள். பஞ்சு வியாபாரத்தில் கொள்ளை லாபம் சம்பாதிக்கலாமெனக் கருதிய ராகவனுக்கு நஷ்டமே உண்டானது. சொத்துக்களை இழந்தான். இப்பரிதாபகரமான நிலையில், பங்கஜம் தன் கணவனைப் பார்த்து, ''நாதா! நவரத்தினங்களினால் பதிக்கப்பட்ட கழுத்து மாலை ஒன்றை எனக்குச் செய்து கொடுங்கள்'' என்று கேட்டாள். அவ்வேண்டுகோளை ராகவன் பூர்த்தி செய்ய முடியவில்லை. ஆனதால், அவள் தன் கணவனோடு தினசரி சண்டையிடலானாள். தினச் சண்டையின் காரணமாக ராகவன் தன் மனைவியை வெறுக்கலானான்.

ஒரு நாள், அவன் தன் மனைவியிடம், ''பங்கஜம்! தினமும் நீ சண்டை போடுகிறாய். உன்னை விட்டு விட்டு சன்னியாசம் ஏற்றுக்கொள்ளப் போகிறேன்'' என்று பயமுறுத்தினான். கணவன் எச்சரிக்கையின் பிறகுங் கூட, பங்கஜத்தின் சண்டை ஓய்ந்தபாடில்லை. ஒரு நாள் ராகவன் வீட்டை விட்டுக் கிளம்பி கடலூருக்குப் போனான். அங்கு ஒரு வாரந் தங்கிப் பிறகு வீட்டுக்கு வந்தான். ''பங்கஜம்! திரும்பி வரமாட்டேன் இனி. சந்நியாசியாய்ப் போகிறேன். ஆனால் உனக்கு ஒன்று சொல்லுகிறேன். வீட்டையும், நிலத்தையும், பசுக்களையும், குழந்தைகளையும் வெகு பத்திரமாக வைத்துக் கொள்'' என்று கூறினான்.

அங்ஙனமே, ராகவன் வீட்டை விட்டுப் புறப்பட்டான். நேராக, காசி க்ஷேத்திரத்திற்குச் சென்றான். ஸ்ரீ ஸ்வாமி சங்கரபாரதி அவர்களைச் சந்தித்து, ''ஸ்வாமிஜீ! எனக்கு சந்நியாசம் அருளுங்கள். தங்களுக்கு நேர்த்தியாகச் சேவை புரிகிறேன். ஆனால், ஸ்வாமிஜீயிடம் ஒரே ஒரு வேண்டுகோள். எனக்குக் காலையில் காப்பியும், உப்புமாவும், மத்தியானம் சாம்பார், ரஸத்துடன் போஜனமும் கொடுத்து விடுங்கள். என் மனைவியைத் துறந்தேன். குழந்தைகளைத் துறந்தேன். சொத்துக்களை விட்டு விட்டேன். காப்பிப் பழக்கத்தை மட்டும் விடவில்லை, அதைத் துறக்க என்னால் முடியவில்லை. கடந்த 45 ஆண்டு களாக இப்பழக்கம் என்னைப் பிடித்துள்ளது'' என்றான்.

ஸ்ரீ சங்கர பாரதி ஸ்வாமிகளோ முற்றுந்துறந்த மகாத்மா. மதுகரி பிட்சையில் வாழ்நாளைக் கழிக்கிறார். ராகவனுக்கு அவர் எப்படி காப்பி உப்புமாவும், ரஸம் சாம்பாரும் கொடுக்க முடியும்? ஆகையால், ஸ்வாமிகள், ''ராகவா! நீ உன் வீட்டுக்குப் போக வேண்டும். பிட்சையினால் நான் வசித்து வருகிறேன். நீ விரும்பியவற்றையெல்லாம் கொடுக்க என்னால் சாத்தியப்படாது. சந்நியாச தர்மத்திற்கு நீ இன்னும் தகுதி வாய்ந்தவனாக இல்லை. நாக்கை அடக்கு. ஜபமும், தவமும் சில வருஷங்கள் வரை பழகி, உலர்ந்த ரொட்டியைத் தின்று உன்னால் வசிக்கக் கூடுமானால், அந்தக் காலத்தில் என்னைத் தேடிவா'' என்றார். இன்னது செய்வதென்று தெரியாமல் ஓர் க்ஷணம் ராகவன் திகைத்தான். ஸ்வாமிஜீயுடன் சேர்ந்து வாழ அவனால் முடியவில்லை. மேலும், அவனுடைய மனமெல்லாம் அவனுடைய மனைவி. மேலும்,

குழந்தைகள் மேலும், சொத்துக்கள் மேலும் விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருந்தது. ஆகவே சிதம்பரத்திற்குத் திரும்பி விட்டான்.

மிகக் கடுமையான சரக்குகளினால் சந்நியாசம் ஆக்கப்பட்டுள்ளது. கஷ்டங்களைச் சமாளிக்க முடியாமல் உலகத்தைத் துறந்தவர்களும், இந்திரியங்களை அடக்க முடியாதவர்களும், உள்ளத்தைக் கட்டுப்படுத்தி ஒழுக்க நெறியில் வாழாதவர்களும், சாதன சதுஷ்டயம் (மோக்ஷத்திற்கு வழிகாட்டிகளான நான்கு வழிகள்) பழகாதவர்களும் சுயநலமற்ற சேவையினாலும், உபாசனையினாலும் மனசானதை அழுக்குப் படியாமலும் அலைந்து திரியவிடாமலும், கட்டுப்படுத்தாதவர்களும் துறவு மேற்கொள்வதாலே எவ்விதப் பயனும் பெறமாட்டார்கள். அவர்களுடைய உள்ளங்கள் யாவும் நமது சிநேகிதன் ராகவனுடைய விதியையே பங்கிட்டுக் கொள்ள நேரிடும் என்பதை நினைவூட்டுகிறோம்.

ஓம் தத் ஸத்.

# 13. ஏகநாத் சுவாமிகள்

பாகவதம் எழுதிய மகாராஷ்ட்ர மாமுனிவர் ஏகநாத் சுவாமிகள். ஜனார்த்தன சுவாமிகள் ஏகநாத் சுவாமிகளின் குரு. ஏகநாத் சுவாமிகள் தமது குருதேவரைப் பார்த்து, ''மரியாதைக்குரிய மகா குருதேவரே! கடவுளை நான் எப்படிச் சாக்ஷாத்கரிக்கலாம்?'' என்று திரும்பத் திரும்பக் கேட்பார்கள். ஜனார்த்தன சுவாமிகளோ ஒருபோதும் குறிப்பிட்ட பதிலைத் தந்ததே கிடையாது.

தமது குருதேவருக்காக எழுதி வைக்கிற கணக்கில் ஒருநாள் ஒரு பைசா தவறு வருகிறதைக் கண்டுபிடிக்க வேண்டியதாயிருந்தது. ஆகையால் இரவு 8 மணிக்கு அவர் உட்கார்ந்தார். ரொக்கச் சிட்டையின் மேலும் குறிப்புப் புஸ்தகத்தின் பக்கங்களின் மேலும் ஏகநாத் தமது பார்வையைச் செலுத்தினார், மீண்டும் மீண்டும். கடிகாரம் மணி 3 அடித்து விட்டது. இன்னும் ஏகநாதர் கணக்கில் வருகிற தவற்றைக் கண்டிபிடித்த பாடில்லை. ''எனது கடமையில் தவறி, குருதேவருடைய வெறுப்புக்கு ஒரு தடவையேனும் ஆளாகி விடலாமா?'' என்று அவர் தம்மையே கேட்டுக்கொண்டார். பதினைந்து நிமிடம் சிரமப் பரிகாரம் எடுத்துக்கொண்டு மறுபடியும் பக்கங்களைப் புரட்டினார். மிகுந்த கவனத்துடனும் ஏகாக்ரத்துடனும் கணக்கைக் கவனித்தார். கடைசியில், கணக்குத் தப்பைக் கண்டுபிடித்து விட்டார்.

அவர் பெருமகிழ்ச்சியடைந்தார். கைகளைக் கொட்டி மனமாரச் சிரித்தார். ஒரு பாட்டைப் பாடவும் தொடங்கினார். திரும்பிப் பார்த்தார்.

தமது குருதேவர் பின்புறம் நிற்பதைக் கண்டு அவரது பாதங்க்ளில் சரணடைந்தார். அப்போது ஜனார்த்தன சுவாமிகள், ''எனது குழந்தாய்! சாக்ஷாத்காரத்திற்கு உனக்கு இப்போது வழி தெரிந்து விட்டது. இதே ஏகாக்ரத்துடன் உனது ஹிருதய அறைகளில் உனது மனத்தை அந்தர் முகமாகத் திருப்பி அவரைக் (கடவுளை) கண்டு பிடிக்கக் கூடாதா?'' என்று சொன்னார். அதற்கு ஏகநாதர், ''மரியாதைக்குரிய மாமுனிவரே! தங்கள் திருவருளால் இப்போது வழியைக் கண்டு பிடித்து விட்டேன். தீவிரமாய் தியானம் பயின்று ஈஸ்வர சாக்ஷாத்காரத்தை விரைவிலே பெறுகிறேன்'' என்று பதிலளித்தார்.

அன்றுமுதல் ஏகநாத் சுவாமிகள் தமது சாதனையில் தீவிரமாயும் சிரத்தையாயும் ஈடுபட்டார்கள். வெகு சீக்கிரத்தில் கிருஷ்ண பகவானைப் பிரத்தியக்ஷமாய்த் தரிசிக்கும்படியான வாய்ப்பும் கிடைத்தது.

# 14. இரண்டு நம்பூதிரிகள்

மலையாளத்துப் பிராமணர்களுக்கு நம்பூதிரிகள் என்று பெயர். சம்ஸ்கிருத நூல்களில் அவர்கள் பாண்டித்தியம் பெற்றவர்கள். ஸ்ரீசங்கராச்சாரியார் நம்பூதிரி குடும்பத்தில் உற்பவித்தவர். ஒரு குலை வாழைப் பழங்களைச் சாப்பிடுவதென்று இரண்டு நம்பூதிரிகள் பந்தயம் போட்டார்கள். கோவிந்தன் கிருஷ்ண னிடம் ''இந்த ஒரு குலை வாழைப் பழங்களையும் மேல் தோலோடு தின்று விட்டால், உனக்கு ஒரு நூறு ரூபாய் இனாமாய்த் தருகிறேன்'' என்றான். பந்தயப் பணம் நூறு ரூபாய் — அதனால் பெரிதும் தூண்டப்பட்டான் கிருஷ்ணன். தோலோடு குலை வாழைப் பழங்களையும் தின்பதற்கு ஒப்புக் கொண்டான். முதலில் கிருஷ்ணன் பழங்களின் தோலையெல்லாம் உரித்தான். பழத்தை முதலில் சாப்பிடுவதா, தோலை முதலில் சாப்பிடுவதா என்ற சந்தேகம் எழுந்தது. எப்படியாயினும் தோலை முதலில் தின்ன வேண்டுமென்றே தீர்மானித்துத் தோலைத் தின்னலானான். வயிறு நிறைந்தது. ஒரு வாழைப்பழச் சுளை விழுங்குவதற்குக்கூட வயிற்றில் ஒரு அங்குல இடமும் இல்லை. கிருஷ்ணன் கோவிந்தனைப் பார்த்து, ''கோவிந்தா! நான் தோற்றுப் போனேன். வயிறு நிரம்பி விட்டது. பழச் சுளைகளைத் தின்ன முடியவில்லை'' என்றான். கிருஷ்ணன் உரித்து வைத்த வாழைப் பழங்களை எல்லாம் மெதுவாகச் சாப்பிட்டான் கோவிந்தன். ஆனந்தமடைந்தான்.

அந்த வேடிக்கையை இருதய பூர்வமாக அநுபவித்தான். கிருஷ்ணனுடைய மகா பரிதாப நிலைக்காக வருந்தி அவனைப் பார்த்து, ''கிருஷ்ணா! அறிவைப் பறி கொடுத்து விட்டாயே! பழங்களைத்

தின்றிருந்தால், அவற்றின் ருசியையாவது அறிந்து சந்தோஷப் பட்டிருப்பாய் — ஒரு நூறு ரூபாய் பரிசைப் பெறத் தவறி விட்டாலும்! இப்போது இரண்டையும் இழந்து விட்டாய். எவ்வளவு அறிவீனன், நீ! இப்பொழுது என்ன செய்வது?'' என்று கூறினான்.

லோகாயத மனப்பான்மை படைத்த மக்கள் கிருஷ்ணனுடைய கதியையே பகிர்ந்து கொள்கிறார்கள். உள்ளே உள்ள அறிவற்ற நித்தியானந்தமான ஆத்மாவைப் பற்றிய சிந்தனை எதுவுமே இல்லை அவர்களுக்கு. அவர்கள் பஞ்சேந்திரியங்களின் வாயிலாகப் பெறும் கீழ்த்தரமான, பொய்யான, பிரமைமிகுந்த சிற்றின்பங்களின் வாழைப் பழத் தோலில் — திளைக்கிறார்கள் — கிருஷ்ணனைப் போல கிஞ்சித் நேரம்! அவர்கள் தங்களிடத்திலுள்ள ஆத்மாவின் நித்தியானந்த சுகத்தை அநுபவிக்காமலும், ஜனன மரணங்களிலிருந்து விடுதலை பெற்று அமரத்வமெனும் பரிசுப் பணத்தைப் பெறாமலுமே இந்த உலகத்திலிருந்து வெளியேறி விடுகிறார்கள். பல்வேறு துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் இடர்களுக்கும் இடுக்கண்களுக்கும் உள்ளாகிறார்கள் — இந்த கீழ்த்தரமான, பொய்யான மாயா ஜால இந்திரிய சுகத்தை அனுபவிப்பதற்காக! எவ்வளவு பரிதாபகரமான காட்சி! எவ்வளவு சோகம் நிறைந்த நிலை!

# 15. அவமானம் அறியாத சுந்தர்தாஸ்

சுந்தர்தாஸ் ஒரு குடும்பஸ்தன். அவன் அடிக்கடி திருட்டில் ஈடுபடுவான். ஒருநாள் ஜமீந்தாரின் தோட்டத்தில் ஒரு குலை வாழைப்பழங்களைத் திருடி விட்டான். தோட்டக்காரன் இவனைக் கையும் மெய்யுமாகக் கண்டு பிடித்து விட்டான். சுந்தர்தாஸ் ஜமீந்தாரின் முன்னால் கொண்டுபோய் நிறுத்தப்பட்டான். அவர் இவனைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பவுமில்லை; நன்றாக அடிக்கவுமில்லை. ஆனால், ஜமீந்தார் ஓர் பழைய முறையைக் கையாண்டார். அம்பட்டனைக் கூப்பிட்டு சுந்தர்தாஸ் தலையை மொட்டையடிக்கச் சொன்னார்; கழுதையின்மேல் வால் பக்கம் முகமாய் ஏற்றினார். (வாழைப் பழக் குலை அவன் கழுத்தில் மாலையாகப் போடப்பட்டது) அந்த ஊர் சுற்றிவருமாறு தோட்டக்காரனை ஏவினார். தோட்டக்காரனும் கழுதையை ஒட்டிக்கொண்டு செல்லலானான். சுந்தர்தாஸ் இது அவமான மென்றே அறிந்துகொள்ளவில்லை.

ஊர்வலக் கழுதை சுந்தர்தாஸ் வீட்டுக்கு முன்புறம் சென்று கொண்டிருந்தபோது, அவனுடைய மனைவி ஓடோடி வந்து பார்த்தாள். "அட பாவி! இந்த அவமானமா! இதைப் பொறுத்துக்கொண்டு போகிறாயே" என்று கைகளை நெறித்துப் பல்லைக் கடித்தாள்.

தன் மனைவியைக் கண்டதும் சுந்தர்தாஸ் "அடி, சுபத்திரா! இதோ இந்த வாழைப் பழங்களை நன்றாய்ப் பிசைந்து பஞ்சாமிர்தம் பண்ணிவை. இன்னும் இரண்டு வீதி பாக்கி,

சுற்றிவிட்டு வந்துவிடுகிறேன்'' என்று கூறிக் கொண்டே, மாலையை எடுத்து வாசற்படி பக்கமாய் வீசினான். மனைவிக்கு எவ்வளவு கடுகடுப் பாக இருந்திருக்கும்!

இந்த உலகத்தில் சுந்தர்தாஸ் போன்ற திருட்டுச் சுபாவஸ்தர்கள் பலர் இருக்கிறார்கள். எவ்வளவு கற்றுங்கூட, பிறர் தம்மைப் பார்த்து எள்ளி நகைக்கும்படியான அவமானச் செயல்களில் ஈடுபடுகிறார்கள், தினந்தோறும். ஆனால் அத்தகைய செயல்களுக்காகக் கிஞ்சித்தும் வருத்தப்படுவதே கிடையாது. தாங்கள் செய்த குற்றங்களை ஒப்புக் கொள்வதும் கிடையாது. மேலும், அக்குற்றங் களைப் புரியாமல் தம்மைத் திருத்திக்கொள்ளவும் முயல்வதில்லை. திரும்பத் திரும்ப பழைய இழிச் செயல்களையே புரிகிறார்கள். எனவே, மானம் என்ற உணர்வு மழுங்கிப்போய், அவர்களுடைய மனம் சூடு சொரணை அற்றுப் பாழ்பட்டு விடுகிறது. காமமே வடிவெடுத்தவர்களுக்கு லஜ்ஜையோ, பயமோ தோன்றுவதில்லை, உணர்ச்சிக்கு அடிமைப் பட்டதுமே, எத்தகைய பாவச் செயலிலும் ஈடுபட்டுவிடுகிறார்கள். அச் செயல்களினால் என்ன விளைவுகள் ஏற்படுமோ என்ற பயமே இவர்களுக்கு இல்லை. ஏமாற்றுகிறவர்கள், பொய்யர்கள், திருடர்கள் ஒருபோதும் முன்னேறுவதே இல்லை. அவர்கள் குணமும், பண்பாடும் திருந்துவதே கிடையாது. இச்செயல்களினால் அண்டை வீட்டுக்காரர்களுக்கும் தமக்கும் எத்தகைய தீங்கு நேருகிறதென்பதையே எண்ணிப் பார்ப்பதில்லை. மாசுமறுவற்றவர்கள் என்றும், தாங்களே அறிவாளிகள் என்றும் இவர்கள் எண்ணுகிறார்கள். ஆனால் பிறரிடத்தில், குற்றங்களைக் கண்டுபிடிக்க முயல்வார்கள். இதுதான் மாயை. மாயையானது புத்தியை மழுங்கச் செய்கிறது. காரண காரியம்

எனும் சட்டத்தை அறிகிறதில்லே. இப்படிப் பட்டவர்கள் மிருகங்களேக் காட்டிலும் கேடுகெட்ட வர்களே. குறுக்காக வளர்கிற மிருகங்களாகப் பிறந்திருக்க வேண்டும். ஆனுல் கருணையினுல் கடவுள் இவர்களே ஒருபடி தூக்கினுர். எனினும், தமது பண்பாட்டைத் திருத்திக் கொள்வதற்குப் பாடுபடுவதாயில்லே. எவ்வளவு துக்ககரமான நிலே! எவ்வளவு பரிதபிக்கத்தக்க விஷயம்! இனிமேலாவது இவர்கள் திருந்த மாட்டார்களா?

கல்வியைக் காட்டிலும் ஆத்மீயப் பயிற்சிதான் சிறந்தது. தற்காலப் படிப்பு ஆத்மீயத்தை வளரச் செய்வதில்லே. ஆத்மபோதகக் கல்லூரிகளே இப்போது தேவை.

## 16. பண்டித கிருஷ்ண சாஸ்திரி

பண்டித கிருஷ்ண சாஸ்திரி தஞ்சாவூர் வாசி. அவர் உண்மையான ஆத்மீய முமுக்ஷு. பெரிய சிவபக்தர். அனுபவ ஞானியாயிருந்த சாஸ்திரி, கைவல்ய நிலேயின் மர்மங்களே உணர ஆவலுள்ளவராய் இருந்தார். சகல சாஸ்திர வல்லுநரும், நெடுங்காலம் தவஞ் செய்தவருமாள சுவாமி சுத்தானந்த பாரதியார் நாசிக் எனும் ஊரிலிருந்தார். இவரது அருமை பெருமைகளேக் கேள்வியுற்ற சாஸ்திரி நாசிக்குப் போய் பாரதியாரிடமிருந்து உபதேசம் பெற வேண்டுமென உறுதி கொண்டார். அங்ஙனமே கால்நடையாகப் பிரயாணமாகி, நாசிக்கை அடைந்து ஸ்வாமிஜீயின் ஆசிரமத்திற்குச் சென்று அவர் முன்னுல் சாஷ்டாங்கத் தண்டம் சமர்ப்பித்தார். ''மரியாதைக்குரிய ஸ்வாமிஜீ! பிறந்த ஊரிலிருந்து இவ்வளவு தூரம் நடந்து வந்து தங்களேத் தரிசித்தேன். தங்கள் பெருமையைக் கேட்டுத் தங்களேயே குருவாகப் பாவித்து

விட்டேன். என்னை ஆட்கொண்டு ஜபத்திற்கு மந்திரோபதேசம் செய்யுங்கள். உலக பந்தங்களினால் வெகுவாய் சித்திரவதை செய்யப்பட்டேன். துறவு மேற்கொள்ளத் துணிந்துள்ளேன். தயவு செய்து கருணைகாட்டுங்கள்'' என்று சாஸ்திரி தனது மனோபீஷ்டத்தைக் கூறினார். ஸ்வாமி சுத்தானந்த பாரதியார் தமக்குச் சீடராக வருபவனின் மனதைத் தெரிந்து கொள்ளும் சக்தி வாய்ந்தவர். ஆத்மீய நெறியில் செல்லத் தகுதி வாய்ந்த மனிதர் அவரே என்று கண்டுகொண்டு அவரைப் பார்த்து, 'கடவுளைத் தேடும் உண்மையான பக்தர் நீரென்பதைக் காண நான் மிகச் சந்தோஷப்படுகிறேன். உமக்கு நம்பிக்கையும் பக்தியும் இருக்கின்றன. ''ஓம் நமசிவாய'' எனும் பஞ்சாக்ஷரத்தை ஜபிப்பீராக. உலகத்தைப்பற்றிய அனைத்தையும் மறந்து விடவும். குடும்பம், குழந்தைகள் சம்பந்தமான பழைய தொடர்புகளையும் மறந்து விடவும். இம்மஹா மந்திர உச்சாடனத்திலே தீவிரமாய் இருக்கவும். சிவபெருமானுடைய தரிசனம் கிடைப்பது நிச்சயம்' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பண்டித கிருஷ்ண சாஸ்திரி குருமந்திர ஜபத்தை நல்ல நாளிலே பக்தி சிரத்தையோடு தொடங்கினார். மோக்ஷ இச்சையுள்ளவராயிருந்தாலும் தமது ஒரே ஒரு மகன் மீதும் தாம் வசித்து வரும் வீட்டின்மீதும் பற்றுள்ளவராயிருந்தார். மற்ற பற்றுக்கள் இல்லை. இவ்விரண்டு பற்றுக்களினால் மாத்திரம் துன்பப்பட்டு வந்தார். மூன்று மாதம் ஜபம் செய்தார். ஒருநாள் தமது ஒரே மகன் இறந்தானென்றும் சில துஷ்டர்கள் தமது வீட்டைத் தீவைத்துக் கொளுத்தி விட்டார்கள் என்றும் அவருக்குத் தகவல் கிடைத்தது. பண்டித கிருஷ்ண சாஸ்திரியின் துக்கம் எல்லை காண முடிய

வில்லை. கண்ணீர் தாரை தாரையாக வழிய, சாஸ்திரி குருவின் முன்னால் போய், ''பிரியுவே ! எனது ஹிருதயத்தின் உள்ளிருந்து தங்களைப் புகழ்ந் தாலும், மோக்ஷ இச்சை கொண்டவனாயிருந்தாலும் எனது ஒரே மகனின் மரணத்தினால் உண்டாகிற அளவு கடந்த துயரத்தால் அவதிப்படுகிறேன். என் வீடு தீக்கிரையாகி விட்டது. இது நீதியா ? நான் செய்யும் ஜபத்தின் பயன் இதுவா ?'' என்று அங்கலாய்த்தார். அன்றிரவே சிவபெருமான் அவர் கனவில் தோன்றி, ''உனக்கு நன்மையே செய் திருக்கிறேன். மனைமீதும் மகன்மீதும் உனக்கு மிகுந்த மோகம் உண்டு, இவ்விரண்டையும் நான் நாசஞ் செய்தேன். எவ்விதப் பற்றுமில்லாத படியால் இப்போது என் மீது சுலபமாயும் தொடர்ச்சியாயும் ஏகாக்ரமாயும் தியானஞ் செய்யலாம். மனோவலிமையை இழக்காதே. தியான ஜபங்களில் ஒழுங்காக இருந்து வா. முக்தி நிலை சீக்கிரம் அடைவாய். என்மீது பக்தி வாய்ந்தவன் நீ'' என்று திருவாய் மலர்ந்தருளினார். பிறகு, பண்டித கிருஷ்ண சாஸ்திரி முழு மனத் தோடு சிவபெருமானைத் தியானித்து மோக்ஷம் அடைந்தார்.

கஷ்டங்களையும் கவலைகளையும் பற்றி முமுக்ஷுக்கள் அஞ்சலாகாது. அவர்களுக்கு தைரியம், பொறுமை, விடாமுயற்சி, மனோவலிமை ஆகிய இவை யாவும் வேண்டும். அதனால் தான், ''ஆத்மாவை பலஹீனமானவனால் அடைய முடியாது'' என்று ஸ்ருதிகள் பலமாக முழங்கு கின்றன. கஷ்டங்களும் கவலைகளும் மறைமுகமான ஆசீர்வாதங்களேயன்றி வேறல்ல.

# 17. குருட்டு பக்தர்கள்

சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர், இராமேஸ்வரத்தில் இராமஸ்வாமி சாஸ்திரி வசித்து வந்தார். வியாக்கியானஞ் செய்தல், தர்க்க சாஸ்திரத் திறமை, ஞான சூட்சுமம் இவையெல்லாம் சாஸ்திரியாருக்கு அமைந்த பேராற்றல்கள். மதாசாரஸத்ஸங்கங்களை நடத்துவார். கதைகள் சொல்லுவார்; வகுப்புகளை திறமையாக நடத்துவார். அக்கம் பக்கத்திலுள்ள மக்கள் அனைவரும் விஜயஞ் செய்து கேட்டானந்திப்பது வழக்கம். எனவே, இவருடைய அன்பர்களும், பக்தர்களும், சீடர்களும் கணக்கில்லாமல் பெருகலானார்கள்.

ஒரு அமாவாசை இராமஸ்வாமி சாஸ்திரியார் கடலில் ஸ்நானஞ் செய்யச் சென்றார். பக்தர்கள் தொடர்ந்தார்கள். ஆயிரக்கணக்கான மக்கள் கடலில் நீராடினார்கள். சந்தியாவந்தனஞ் செய்வதற்காக சாஸ்திரியாரிடம் நீளமான பித்தளைப் பாத்திரம் ஒன்றிருந்தது. குளிக்கச் செல்லுமுன் மணலில் சிறு குழி தோண்டி அதில் பாத்திரத்தை வைத்து அக் குழியை மணலினால் மூடிக்குவித்து ஓர் லிங்கம்போல் செய்தார். பிறகு நீராடினார். லிங்கம்போல் செய்யப்பட்ட மணலிலே பாத்திரம் வைக்கப்பட்டுள்ளதை சுலபமாக அடையாளம் கண்டு கொள்ளலாமென்றே அப்படிச் செய்தார். தம்து குரு சிவலிங்கம் செய்தது போலவே, பக்தர்களும் மணலினால் சிவலிங்கங்கள் செய்தார்கள்.

சாஸ்திரியார் பித்தளைப் பாத்திரம் எடுப்பதற்காக கரைக்கு வந்து, தாம் செய்த லிங்கம் போல பல லிங்கங்கள் இருப்பதைப் பார்த்தார். ''ஹே பக்தர்களே ! மணலை லிங்கம்போல யார்

இப்படிக் குவித்தது? என்ருல் குவிக்கப்பட்ட லிங்கம் எது எனத் தெரியவில்லையே? ஒரே குழப்ப மாயிருக்கிறது'' என்ருர். மரியாதைக்குரிய மஹானுபாவரே! தாங்கள் மணலைக் குவித்தவாறு நாங்களும் குவித்தோம். ஒவ்வொருவரும் சிவ லிங்கத்தை மணலினுல் அமைத்தோம்'' என்று பக்தர்கள் பதில் கூறினுர்கள். சிஷ்யர்களைப் பார்த்து ''சிஷ்யர்களே! குருட்டுத்தனமான பக்தியில் இப்படிச் செய்ய வேண்டாம். யாரையும் இப்படிப் பின் பற்ருதீர்கள். விஷயத்தை முதலில் அறிந்து கொண்டு பின் எதையும் செய்யுங்கள். அறிவீனமான காரியம் இன்று செய்து விட்டீர்கள். என் பாத்திரத்தை இழந்து விட்டேனே'' என்று குற்றஞ் சாட்டிக் குறைப்பட்டார்.

நீதி: நீங்கள் குருட்டுத்தனமாக எதையும் செய்யக் கூடாது. எவரையும் குருட்டுத்தனமாகப் பின் பற்றுதல் கூடாது. முதலில் நன்கு யோசிக்கவும். ஒரு பொருளை அறிய முடியவில்லை யென்ருல் நிபுணர் ஒருவரை பக்தி சிரத்தையுடன் அணுகிக் கேளுங்கள். அவர் தெளிவான முறையில் சகலவற்றையும் விளக்குவார். அடிப்படையான தத்துவார்த்த உண்மைகளைக் கிரஹித்துக் கொண்ட பின்னர், அவற்றின்படி அனுஷ்டானம் செய்ய முயற்சியுங்கள்.

# 18. ஸ்ரீ கிருஷ்ணபிரானும் சுதாமரும்

சுதாமர் ஸ்ரீ கிருஷ்ணபிரானைத் தேடி போன போது அவர் தமது அரண்மனையில் இருந்தார். சுதாமரோ ஏழை போலக் கந்தலாடை உடுத்திக் கொண்டிருந்தபடியால், அரண்மனைக்குள்ளே போகத் தயங்கினார். ஸ்ரீ கிருஷ்ணபிரான் ராதையோடு சல்லாபித்திருந்தார். காவலாளி கடுகி வந்து, ''ஸ்வாமி! கந்தல் துணியுடன் ஓர் ஏழைப் பிராமணர் வந்துள்ளார். சுதாமர் என்ற பெயராம் — தங்களுடைய ஆப்த சினேகிதர் என்று உரிமை பாராட்டுகிறார். அவர்......'' என்று கூறினான்.

பேச்சு முடிக்கவில்லை. சுதாமர் என்ற பெயர் செவியில் விழுந்ததோ இல்லையோ கண்ணபிரான் தமது ஆசனத்தை விட்டு எழுந்து அறையைக் கடந்து வெற்றுக் காலாலே ''சுதாமா, எனது ஆப்த சுதாமா'' என்று கூவிக்கொண்டே ஓடினார்; ராதையோ ஏன் அப்படி ஓடுகிறார் என்று தெரியாமல் விழிக்கிறாள். சிறிது நேரத்திற்கெல்லாம் சுதாமரை இட்டுக்கொண்டு கண்ணபிரான் வந்து சேர்ந்தார். முகவாட்டமுற்றிருந்த ராதையைக் கண்டு, ''ராதா! என்னை மன்னிக்கவும். என் ஆத்மாவைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாகவே என் பக்தர்களை நேசிக்கிறேன். பக்தர்களுக்கு பகவான் அடிமை'' என்று உரைத்தார்.

அப்பால் தமது ஆசனத்தையே மரியாதையுடன் தந்தார் சுதாமருக்கு. க்ஷேமலாப விசாரணையின் போது, கண்ணபரமாத்மா, சுதாமர் ஏதோ ஒரு சிறு முடிப்பைக் கொணர்ந்துள்ளார் என்பதைக் கண்டு கொண்டார். அரைகுறை வேக்காட்டுடன்

தயாரிக்கப்பட்ட அவல் முடிப்பைக் காணிக்கை யாகக் கொடுக்கவே சுதாமர் கொண்டு வந்துள்ளார். அவ்வளவு மஹத்தான பகவானுக்கு கேவலம் இழிவான அவலைக் காணிக்கையாகக் கொடுப்பதா என்று தயங்கிப் பின் வாங்குகிறார். மறு கணத்தில் கண்ணபிரான் அந்த முடிப்பை வெடுக்கெனப் பற்றிக் கொண்டு அவலைத் தின்னத் தொடங்கினார். ''ராதா! இதுவரை இதைப் போன்ற இனிமையான பண்டத்தைச் சுவைத்ததே கிடையாது'' என்று பாராட்டினார். பகவானுக்கு பக்தர்களிடத்தில் உண்டாகும் பேரன்பு இத்தகையது என்பதை இச்சிறு சம்பவத்திலிருந்து உணர்ந்து கொள்ளுங்கள். பகவானைப் பஜியுங்கள்.

## 19. சோகா - மேலா

அரசமரத்தடியில் மஹா முனிவராகிய சோகா - மேலா ஆகாரம் புசித்துக் கொண்டிருந் தார். கிருஷ்ண பரமாத்மாவும் கூடவே இருந்து உணவருந்தினார். மேலாவின் மனைவி தயிர் கொணர்ந்து கிருஷ்ண பகவானுக்குப் பரிமாறினாள். அவ்வாறு பரிமாறும்போது, கொஞ்சம் தயிர் கிருஷ்ண பகவானின் உடையில் தெறித்தது. மேலா அவளைக் கடுமையாகக் கோபித்து ''பண்டரி நாதருக்குப் பரிமாறுதல் இங்ஙனமா? பணிவு என்பதே கிடையாது. சிரத்தை கிஞ்சித்தும் கிடையாது'' என்று திட்டினார்.

ஓர் பிராம்மணப் புரோகிதர் சாலை வழியே சென்றார். இவ்வார்த்தைகளைக் கேட்டார். மஹா முனிவர்தான் ஸ்ரீ கிருஷ்ணரை நிந்திக்கிறாரென்று கருதி, வெகுவாய்க் கோபித்து முனிவரின் கன்னத்தில் முஷ்டியால் குத்தினார். பின், ஆற்றில்

நீராடி விட்டலைத் தரிசிக்கக் கோவிலுக்குப் புகுந்தார். விட்டலைத் தரிசித்த சமயத்தில் அவருடைய பீதாம்பரத்தில் தயிர் தெறித்த கறை படிந்திருந்ததைப் பார்த்தார். விட்டல் கன்னங்கள் வீங்கிக் கண்ணீர் மல்கியதைக் கண்டார்.

பிராம்மணப் புரோகிதருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''என்ன கொடிய குற்றத்தைச் செய்தேன். அவர் உண்மையான முனிவர். விட்டல் சுவாமியின் திருவருளைப் பெற்றவர். சுவாமி அவரை மிகவும் நேசிக்கிறார். நானோ மகா பாபி, வேஷதாரி, என் வழிபாட்டில் உண்மை கொஞ்சமும் இல்லை. இன்னமும் என் நெஞ்சு கல்லாயிருக்கிறது. நான் பிராம்மணன் என்ற அபிமானம் கொண்டுள்ளேன். தாழ்த்தப் பட்டவர்களை வெறுக்கிறேன். அகம்பாவங் கொண்ட பிராம்மணன் நான். விட்டல் சுவாமி அன்புடன் நேசிக்கிற ஒரு பக்தனை அடித்து தொந்தரவு செய்தேன்'' — என்றெல்லாம் அவர் தமக்குள் சிந்தனை புரியலானார்.

தாம் செய்த குற்றத்திற்காகப் பெரிதும் பச்சாதாபப்பட்டார். மிக்க பணிவு கொண்டார். ஆற்றைக் கடந்து அக்கரைக்குப் போய் முனிவரை அழைத்துக் கொண்டு வந்து விடோபா ஸ்வாமி கோவிலுக்குள் புகுந்தார். விடோபா ஸ்வாமியின் கன்னங்களின் வீக்கம் மறைந்தது. அவருடைய முகாரவிந்தத்தில் பிரபை தவழ்ந்த முறுவல் பிரகாசித்தது.

கடவுளிடத்தில் ஜாதி, மதம், வருணம் என்கிற பாகுபாடே கிடையாது. அவருடைய நோக்கத்தில் சகலரும் சமம். எல்லோரும் அவர் குழந்தைகள்.

பக்தியுள்ளவன் பகவானுடைய அன்புக்கு உரியவன். அவன் பிராம்மணனோ, பாதரக்ஷை தைப்பவனோ, க்ஷத்திரியனோ அல்லது நகரசுத்தி செய்பவனோ யாராயிருந்தாலும் சரி. பக்தி கொண்டவன் உண்மையான பிராம்மணன். பிராம்மணனாய்ப் பிறந்திருந்தாலும் பக்தி இல்லாதவன் சூத்திரனே ஆவான். பணிவு கொண்டவர்கள் பகவானால் ஆசீர்வதிக்கப்படுவார்கள். பரந்த பக்தியும் சம திருஷ்டியும் வாய்ந்தவர்கள் யாவரும் ஆசீர்வதிக்கப் படுவார்களாக.

## 20. நரேந்திர இளவரசன்

நரேந்திர இளவரசனின் மனைவி லீலாவதி இராமபிரானை பக்தியோடு வழிபட்டாள். ஆனால் நரேந்திர இளவரசனோ, இராம நாமத்தைக் கூட உச்சரிப்பதில்லை. இதனால் லீலாவதி பெரிதும் கவலைப்பட்டாள். அவள் தன் கணவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள் — இராம நாமத்தை ஒரு தடவையாவது உச்சரிக்கும்படி. நரேந்திரனோ பிடிவாதமாயிருந்தான். உச்சரிக்க முடியாதென மறுத்தான்.

ஒரு நாள் காலையில் லீலாவதி மிக்க மகிழ்ச்சி அடைந்தாள். திவானை அழைத்து ''இன்று எனக்குச் சந்தோஷமான நாள். அதன் காரணத்தை இப்போது சொல்லமாட்டேன். ஆயிரக்கணக்கான பிராம்மணர்களுக்கும், ஏழை களுக்கும் விருந்து செய். இன்றிரவு வாண வேடிக்கைக்கு ஏற்பாடு பண்ணு. நகரத்தின் பிரதான வாசல்களில் வாத்திய கோஷம் முழங்குமாக'' என்று கட்டளையிட்டாள்.

இராணியின் உத்திரவு நிறைவேற்றப்பட்டது. நகரமெங்கும் குஷியும் கும்மாளமும் கூத்தாடின. இக் கொண்டாட்டம் எதற்காக நடத்தப்படுகிற தென்பது யாருக்கும் தெரியாது. இக்குதூகல காட்சிகளை இளவரசன் கவனித்தான். திவானை அழைத்து, ''திவான் சாஹிப்! என்ன விசேஷம் இன்று?'' எனக் கேட்க, ''இத்திருவிழாவுக்குக் காரணம் எனக்கே தெரியாது. இராணியின் கட்டளை இது'' என்றான் திவான். பின், அரசன் மனைவியைக் கேட்டான். அதன் காரணத்தைச் சொல்ல மறுத்தாள். இடைவிடாமல் இளவரசன் கேட்டதனால், இராணி கூறத் தொடங்கினாள். ''என் பிராண நாயகரே! என் மன நிறைவு நாள் இது. என் ஆனந்தத்திற்கு எல்லை இல்லை. என் நிலையைச் சரியாய் விளக்க முடியவில்லை. எனது இடையறாத வேண்டுகோளுக்கு மாறாக, தாங்கள் கொடுக்க மறுத்ததும், நான் விருப்பத்துடன் எதிர் பார்த்ததுமான ஒன்றை நான் இப்போது அடைந்து விட்டேன். நேற்றிரவு தூக்கத்திலே பகவத் நாமத்தைப் பல தடவை உச்சரித்து விட்டீர்கள். இது மிகவும் வரவேற்கத்தக்கது. ஆசீர்வதிக்கப் பட்டேன் பகவானால். இன்று எனக்கு கொண்டாட்ட நாள். ஆதலால் இத் திருவிழாவை நடத்த உத்திரவிட்டேன்'' என்றாள் மகிழ்ச்சி யோடு. ''என்ன நாமம்?'' என நரேந்திரன் வினவ, லீலாவதி ''இராம நாமம்'' என்றாள். அதற்கு நரேந்திரன், ''ஆ! இதுவரை என் ஹிருதயத்தின் ஆழமான குகையில் இரகசியமாக வைத்திருந்த பொக்கிஷம் கடைசியில் வெளிப்பட்டு விட்டதா?'' என வியப்புற்றான். இளவரசன் இதைச் சொல்லியவுடனே கீழே சாய்ந்தான் பிணமாக. இராணி ஸ்தம்பித்து ஊமை போலானாள். இதுவரை அவளது பிராண நாயகர் இராமபிரானுடைய மௌனமான, உண்மையான,

ஆடம்பரமற்ற பக்தன் என்பது லீலாவதிக்குத் தெரியாது.

உண்மையான பக்தன் ஒருவன் தனது பக்தியையும், பரிசுத்த நிலைமையையும், விளம்பரப் படுத்திக் கொள்ள ஒருபோதும் சம்மதியான். ஆஷாடபூதி தான் தன் பக்தியை வெளியே காட்டிக் கொள்வான். ''ஹரி, ஹரி'' என்று உரக்கக் கூவுவான். கழுத்தில் பல மாலைகளை அணிந்திருப் பான். பொய்யான நீலிக் கண்ணீரை விடுவான். மக்களிடமிருந்து பணம் பறிக்கத் தந்திரம் பண்ணுவான். நம்பிக்கையான அறிவிலிகள் ஏமாற்றப்படுகிறார்கள். கடைசியில் போலி பக்தன் பிடிபடுகிறான். உண்மையான பக்தன் தன்னை வெளியே காட்டிக் கொள்ள மாட்டான். தன்னைப் பற்றிப் பகிரங்கப்படுத்திக் கொள்ள இசையான். காலியான பாத்திரமே மிக்க சப்தத்தைச் செய்யும். போலி பக்தன் முதலில் தன் ஆத்மாவை ஏமாற்றிப் பிறகு கடவுளையும் பிறரையும் ஏமாற்றுகிறான். புண்ணிய க்ஷேத்திரங்களிலெல்லாம் போலி பக்தர்கள் நிறைந்துள்ளார்கள். அந்தந்த க்ஷேத் திரத்திற்கு வரும் ஒன்றுமறியாத யாத்திரீகர்களை உணவாகக் கொள்கிற உண்மையான வல்லூறுப் பட்சிகள் போன்றவர்கள்.

பக்தியுள்ளவனாகவோ, சன்மார்க்கனாகவோ உன்னைக் காட்டிக் கொள்ள ஒருபோதும் முயற்சிக் காதே. உனது ஆத்மீய சாதனைகளைப் பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்லாதே. நீ ஜபமும், தியானமும் செய்கிறாய் என்பதை வெளிப் பகட்டாகக் காட்டிக் கொள்ளாதே. அவைகளை மனப்பூர்வமாகச் செய். கழுத்தில் மாலையணி யலாம் — சட்டைக்கு அடியில் அல்லது மேல் அங்கவஸ்திரத்திற்கு அடியில். உனது ஆத்மீய அனுபவங்களை வெளியே சொல்லிக் கொள்ளாதே.

# 21. கிராம முனிசீப்

ஒரு ஏகாதசியன்று பிரக்யாதி பெற்ற மஹாராஷ்டிர முனிவர் துக்காராம் என்பவர் தீவிரமாகக் கீர்த்தனம் பாடிக் கொண்டிருந்தார். கீர்த்தனையை இரவு எட்டு மணிக்குத் தொடங்கியவர் மறுநாள் காலை எட்டு மணிக்கு முடித்தார். பெரிய கூட்டம். பத்து மணிக்குப் பிறகு எல்லோரும் எழுந்துபோய் விட்டார்கள். அவ்வூர் கிராம முனிசீப் மாத்திரம் அங்கே இருந்தார். துக்காராம் தெய்வீக ஆனந்தத்தை நன்கு பருகினார். அவர் முற்றிலும் கடவுள் பைத்தியம் கொண்டிருந்தார். பண்டரிபுரம் விட்டல் ஸ்வாமி துக்காராம் கீர்த்தனையில் கலந்து கொண்டார். இருவரும் விடியும் வரை பிரஹ்மானந்த நிலையில் நாட்டிய மாடினர். துக்காராம் கண்ணைத் திறந்தார். மூலையில் ஒருவர் உட்கார்ந்திருந்ததைக் கண்டு, ''என் அன்புள்ள சகோதரனே! உலகத்தில் நீ மிகவும் அதிர்ஷ்டசாலி. என் கீர்த்தனையில் சேர்ந்து பாடியும் என்னோடு ஆடியும் மகிழ்வித்த பண்டரிபுரம் விட்டல் சுவாமியை நீ நேற்றிரவு பார்த்தாயா?'' என்று கேட்டார். கிராம முனிசீப், ''துக்காராம் முனிவரே! நேற்றிரவு முழுதும் தூங்கிவிழுந்து கொண்டிருந்தேன். தாங்கள் நின்று கொண்டிருக்கும் ஜமுக்காளம் என்னுடையது. என் மனம் சதா காலமும் ஜமுக்காளத்தின் மேலிருந்தது. யாரையும் நான் பார்க்கவில்லை''. தங்கள் கீர்த்தனையைகூட கவனிக்கவில்லை. ''துக்காராம் சுவாமிகள் எப்போது கீர்த்தனையை முடிப்பார்? ஜமுக்காளத்தை எப்போது வீட்டுக்குக் கொண்டு போவேன்? என்று எனக்குள்ளேயே யோசித்துக் கொண்டே இருந்தேன்.

மனம் எப்படி பொருள்களின்மீது பற்று வைக்கிறது என்பதைக் கவனியுங்கள். பற்றுதான் ஜனன மரணத்திற்கு மூலகாரணம்; எல்லா துக்கங்களுக்கும் காரணம் அதுவே. புதிய சாதகர்கள் தியானத்தில் அமர்ந்தால், குரங்கு போல மனம் பல்வேறு பொருள்களை நாடிச் செல்லுகிறது. கிராம முனிசீப் எப்படி தமது ஜமுக்காளத்தை மாத்திரம் நினைத்துக் கொண்டிருந்தாரோ, அப்படியே புதிய முமுக்ஷு தனக்குப் பிரியமுள்ள ஏதாவது ஒன்றின்மேல் ஞாபகத்தை வைத்துக் கொண்டிருப்பான். அநேக கிழவர்களும் கிழவிகளும் காசியில் இறந்தால் மோக்ஷம் அடையலாமென்ற நம்பிக்கையுடன் அங்கே தங்கியிருக்கிறார்கள். ஆனால், அவர்களுடைய மனம் விஸ்வநாத ஸ்வாமியின் தாமரை மலர் போன்ற திருவடியில் பதியாமல், அவர்களின் பேரன்மார்களையும் சொத்தையும் பற்றி நினைக்கும். வைராக்கியம் என்ற வாளாயுதத்தால் பற்று என்பதை இரக்கமில்லாமல் வெட்டித் தள்ளிவிடு. பிறகுதான் சாந்தியை அனுபவிக்கலாம். பின்புதான் ஆழ்ந்த தியானத்திலும் சமாதியிலும் ஸ்தாபிதம் பெறக்கூடும்.

# 22. யுதிஷ்டிர மகாராஜா

பத்திரிநாராயண யாத்திரையின்போது, யுதிஷ்டிர மகாராஜா தமது ராணியுடன் ஹிருஷிகேசத்தில், கங்காதீரத்தில் நின்றுகொண்டிருந்தார். அவரது நற்குணங்களுக்காக ராணி அவரைக் கண்டித்துக்கொண்டிருந்தார். ''ஏன் கடவுளை சதா சிந்திக்கிறீர்கள்? அவரை ஏன் புகழ்கின்றீர்கள்? இதனுல் தாங்கள் என்ன லாபத்தைப் பெற்றீர்கள்? அவர் தங்களுக்கு என்ன கொடுத்துள்ளார்? தங்கள் வாழ்க்கை முற்றிலும் துன்பமயமே தவிர வேறொன்றுமே கிடையாது. இப்படியிருந்தும்கூட சதா கடவுளிடம் பக்தி செலுத்துகிறீர்கள்; இடையருது நேசிக்கிறீர்கள்'' என்று கேட்டாள்.

அரசர் அதற்கு, ''என் பிரிய நாயகி! அந்த மலைகளைப் பார் — மஹத்தான அழகிய ஹிமாசலத்தை! இயற்கைக் காட்சிகள் எவ்வளவு கவர்ச்சிகரமாயும் வசீகரமாயும் அமைந்துள்ளன! நமது மனம் எப்படி மேலே நோக்கிச் சென்று அவற்றின் காட்சியில் ஆவேசமடைகிறது! அவற்றை எவ்வளவு நேசிக்கிறோம்! அவைகளிடம் எதையும் நாம் கேட்பதில்லை. கேட்பதற்கு எதுவும் கிடையாது. அழகு மாத்திரம் திருப்திகரமானது. சிறப்பான நிலை ஒன்றே போதும். இந்த மாதிரியே கடவுளை நான் நேசிக்கிறேன். கருணுமூர்த்தியாயும், நண்பராயும், இரக்ஷகராயும், சிருஷ்டிப்பவராயும், ஹிருதய கமலத்தில் வாசஞ் செய்கிறவராயும், நமக்கு எல்லாவற்றையும் கொடுக்கிறவராயுமுள்ள கடவுளிடத்தில் யாராவது பேரம் பண்ணுவார்களா? கடவுள் கருணைக் கடல். அவர்

கருணையே உருக்கொண்டவர். கடவுளின் திருவடியில் மனத்தைப் பதியவைக்கிற வாழ்வின் நிறைவினை ஒரு பக்தன் பெற்று விட்டானானல் அவனுக்கு வேறு என்னதான் தேவை? உலகில் அவன் மிக்க ஆசிபெற்றவனல்லவா! கடவுளின் ஐஸ்வரியம் அனைத்தும் அவன் பெறவில்லையா? வேறு தேவையின் தூண்டுதல் அவனுக்கு உண்டாகாது. ஆசைகள் அனைத்தும் பூர்த்தியாய் விட்டன. அவன் மஹிமையே விவரிக்க வொண்ணாதது. ஆகையால், என் அன்பே! கடவுளிடம் பக்தியை வளர்ப்பாயாக. பக்தி பெரியதோர் சக்தி. பக்தி நல்ல மாறுதலை உண்டுபண்ணி, தூய்மைப்படுத்தி, மோக்ஷத்தை அளிக்கிறது. நித்தியத்துவமும் நித்தியானந்தமும் தருகிறது. எனவே, பக்தியின் பொருட்டு பக்தி செய். திருவருளைப் பெறு. பரந்தாமனின் நிர்மலமான சாந்தி நிலையை எய்துவாய்'' என்றார்.

# ௨௩. ஸ்ரீ இலக்ஷ்மி தேவியும் சரஸ்வதி தேவியும்

தென்னிந்தியாவில் சிதம்பரத்தில் பிரசித்தி பெற்ற முனிவர் ஒருவர் இருந்தார். 'சதாசிவம்' என்பது அவர் பெயர். ஸரஸ்வதி தேவியின் பரிபூரண அருள் அவருக்குண்டு. ஸரஸ்வதி தேவியார் அவரிடமே வசித்தார். எல்லாச் சாஸ்திரங்களிலும் அவர் நல்ல தேர்ச்சி பெற்றவர். அவர் ஒரு கவிஞரும்கூட. கண் சிமிட்டும் நேரத்தில் பாட்டுக்களை இயற்றக் கூடிய வரகவியாய் இருந்தார். நாலா திசைகளிலும் அவர் கீர்த்தி பரவியது. வடஇந்தியாவிலிருந்துங்கூட அநேகர் அவரை தரிசிக்க வந்தார்கள். ஆனால் அவர் பரம ஏழை; ஒரு பன்னகசாலையில் வசித்து வந்தார்.

அவரது அன்பர்களும் பக்தர்களும் நாளாவட்டத்தில் அவருக்குப் பெரிய பெரிய மாளிகைகளைக் கட்டி உதவினார்கள். பன்னகசாலை பெரியதோர் ஆஸ்ரமமாகப் பரிணமித்தது. பணம் திரண்டு வந்தது. இப்போது அங்கே ஸ்ரீ லக்ஷ்மிதேவி வாசஞ் செய்யலானார். நேர்த்தியான பூந்தோட்டங்களும் ஏராளமான பசுக்களும் நிறைந்துவிட்டன. ஆஸ்ரமத்தின் முன்புறத்து ஹாலில் ஸ்ரீ லக்ஷ்மிதேவி அழகாக அலங்கரித்துக் கொண்டு ஆனந்தமாக நடனமாடுவார். ஆனால் ஸரஸ்வதிதேவியோ கந்தை அணிந்தார். அத்தேவி உள்ளே ஒரு அறையில் வசித்தார்.

ஸ்ரீ லக்ஷ்மி தேவிக்கும், ஸரஸ்வதி தேவிக்கும் சண்டை மூண்டது. இது இயற்கைதானே! மகா விஷ்ணுவின் மனைவியாதலால், ஸ்ரீ லக்ஷ்மிதேவி மாமியாவார். ஹரியின் உந்திக் கமலத்திலிருந்து

உதய்மானுர் பிரஹ்மதேவர். அவரது மனைவி ஸரஸ்வதிதேவி. ஸ்ரீ லக்ஷ்மிதேவிக்கு மருமகள் அல்லவா! உலகத்தில் கூட மாமிக்கும், மருமகளுக்கும் சண்டை உண்டாகிறது. மாமிகள் அகம்பாவிகள். மருமகள் தனக்கு உடனடியாகப் பணிவிடை செய்ய வேண்டுமென்றும், தாம் பூலத்தைத் தாழ்மையாக வணக்கத்துடன் வழங்க வேண்டுமென்றும் மாமி எதிர்பார்க்கிருள். மாமிகள் எழுத்து வாசனை அற்றவர்கள்; தற்கால மாட்டுப் பெண்களோ பி. ஏ. பட்டதாரிகள். அவர்கள் தங்கள் மாமிகளுக்குப் பணிவிடை பண்ண விரும்புவதில்லை.

ஸ்ரீ லக்ஷ்மிதேவி ஸரஸ்வதியைப் பார்த்து, ''ஸரஸ்வதி, நீ முனிவருடன் வசித்தகால பரியந்தம் ஏழ்மை குடி கொண்டிருந்தது. முனிவர் கந்தை கட்டினுர். அவருக்குச் சாப்பாடும் கிடைக்கவில்லை. சில வேளை பட்டினியும் கிடந்தார். வசிக்க வீடும் இல்லை. ஆஸ்ரமத்திற்கு நான் வந்த பிறகு எப்படி என்பதைப் பார். பணம் திரண்டு வர, பசுக்கள் ஏராளம். பெரிய ஆஸ்ரமம் பார்த்தாயா? சாப்பாட்டுக்குப் பஞ்சமில்லை; எதுவும் இல்லை என்ற சொல் இல்லை. யார் உயர்ந்தவர் இப்போது எனக்குச் சொல்?'' என்று கேட்டார்.

பொறுமையும் ஞானமும் நிறைந்த ஸரஸ்வதி தேவியார் எந்தவிதப் பதிலும் கொடுக்கவில்லை. சதாசிவ முனிவரிடத்தில் ஸ்ரீ லக்ஷ்மிதேவி ஸரஸ்வதி தேவியிடம் பேசினதைச் சொல்லி தம்முடைய உயர்வை உணர்ந்து கொள்ளுமாறு வற்புறுத்தினுர். தினசரி இரு தேவியருக்கும் சண்டை நடந்தது. சதாசிவ முனிவரால் இதைச் சகிக்கக்கூடவில்லை. ஒரு நாள் ஸ்ரீ லக்ஷ்மிதேவியைப் பார்த்து சதாசிவ முனிவர், ''ஸ்ரீ மகா லக்ஷ்மிதேவி! எனக்குச்

செல்வமோ பெரிய ஆஸ்ரமமோ வேண்டாம். தாங்களே தங்கள் யுக்தப்படி விஜயஞ் செய்தீர்கள். நான் பன்னக சாலையில் வசிக்கக்கூடும். தற்செயலாகக் கிடைக்கும் எதனுடனும் நான் திருப்திப் படுவேன். இந்த ஆஸ்ரமம் இப்போது போர்க் களமாக மாறிவிட்டது. சாந்தி என்பதே கிடையாது. தாங்கள் இப்போது என்னைப் பிரியலாம். அதனால் கவலை இல்லை. இதுகால பரியந்தம் தாங்கள் செய்துள்ள ஆக்க வேலைக்காக மிக்க நன்றி பாராட்டுகிறேன். தாங்கள் விரும்புகிற வசதியான எந்த இடத்திலும் தாங்கள் போய் வசிக்கலாம். இந்த இடம் தங்களுக்குத் தகுதி வாய்ந்ததாக இல்லை'' என்று சொல்லிவிட்டார்.

சதாசிவத்தை விட்டு ஸ்ரீ தேவி பிரிந்தார். ஸரஸ்வதிதேவி இல்லாத இடங்களிலே ஸ்ரீ தேவி வசித்து வரலானார். சாராயக் கடைகளில் வசித்தார். தானியங்களும் பஞ்சும் விற்கப்படும் இடங்களில் வசித்தார். ஒருவரை ஒருவர் ஏமாற்றி பிழைப்பவர்களும், பொய் பேசிப் பொழுதைப் போக்குவோர்களும் வாழுமிடங்களில் ஸ்ரீ தேவி வசிக்கலானார். இந்த ஸ்தலங்களிலெல்லாம் ஸ்ரீ தேவியை மக்கள் வழிபட்டனர்; இங்ஙனமாக ஸ்ரீ தேவிக்குச் சுலபமாக அன்பர்களும், பக்தர்களும் ஏற்படலாயினர்.

ஸரஸ்வதி தேவியாரின் திருவருளுடன் சதாசிவ முனிவர் மகிழ்ச்சியோடு காலங் கழித்தார். செல்வமில்லாவிடினும் அவருக்குப் பெருத்த புகழ் ஏற்பட்டது. அவரது நாமம் ஒவ்வொருவருடைய உதட்டிலும் உச்சரிப்பு கண்டது. பண முதலாளிக்கு ஞான சூனியக் கையெழுத்துகூடப் போடத் தெரியாது. இப்படிப்பட்டவனுக்குப் பணம் இருந்து தான் என்ன பயன்? ஏழையாயினும் எங்கு

சென்றாலும், ஒரு வித்வானை எல்லோரும் போற்றி வணங்குவார்கள். படிப்பு இல்லாத பணக்காரன் பிணத்திற்குச் சமம் ஆகிறான்.

ஸரஸ்வதி தேவியார் எங்கெங்கு வாசம் புரிகிறாரோ, அங்கங்கு ஸ்ரீ மகாலக்ஷ்மி தேவியைக் காண முடியாது. தென்னிந்தியாவில் இராமாயணம் பாடிய மகாகவி கம்பருக்கு ஸரஸ்வதி தேவியாரின் தரிசனம் விரும்பியபோதெல்லாம் கிடைக்கும். அப்பேர்ப்பட்ட மகா கவிஞர் மிக்க ஏழை. ஆங்கிலக் கவிகளான கோல்ஸ்மித், வால்டர்ஸ்காட் என்பவர்களும்கூட மிகுந்த ஏழைகள். ''கௌபீன வந்த கலுபாக்யவந்த'' என்று ஸ்ரீ சங்கரர் அருளியுள்ளார். அதாவது கௌபீனம் மாத்திரந் தரித்தாலும் ஞானமே நிறைந்தவராயுள்ள முனிவரே பரமானந்தமும் செல்வமும் படைத்தவர் என்பதாம். ஆன்மீயச் செல்வமோ வற்றாதது. கள்வன் எவனும் கவரான். கடன்பட்டு 'இன்சால் வென்டு' பேர்வழியாவதில்லை. ஆன்மீயச் செல்வமும் எப்போதும் நிறைவாயிருக்கும்.

# 24. மூடன் கற்ற மூன்று ஆங்கிலச் சொற்றொடர்கள்

பாபாராம் 30 வயதுள்ள சுறுசுறுப்பான யௌவன புருஷன். இளமைப் பருவத்தை ஆடம்பரமாகக் கழித்துப் படிப்பிலே கவனம் செலுத்தவில்லை. பெரியவனாக வளர்ந்த பிறகு, தன் அஜாக்கிரதையைக் குறித்துப் பச்சாத்தாபப் பட்டான். ஆந்திர தேசத்தில் பிறந்தவனாதலால் தாய் பாஷையில் வல்லவனாயிருந்தான். ஆனால் அவனுக்கு எழுதவோ படிக்கவோ தெரியாது. ஆங்கிலம் கற்க வேண்டுமென்ற பேரவா அவனைப் பிடித்தது. தினசரி வாழ்க்கையில் ஆங்கில பாஷை அவசியம் உபயோகமாகிறதெனத் தெரிந்து கொண்டு, ஆங்கிலம் கற்ற ஒரு அறிஞரிடம் போய்த் தன் கருத்தை வெளியிட்டான். அதற்கு அவர், ''எனக்கு ஒய்வு கிடையாது. ஆனால் உனக்கு ஏதாவது கொஞ்சம் ஆங்கிலம் சொல்லிக் கொடுக்கிறேன்'' என்று கூறி, 3 சொற்றொடர்களைக் கற்றுக் கொடுத்தார்.

(1) Yes, Sir (ஆம், ஐயா)

(2) No, Sir (இல்லை, ஐயா)

(3) Very well, Sir (நிரம்பவும் நல்லது, ஐயா)

என்ற மூன்று ஆங்கிலச் சொற்றொடர்களைக் கற்றுக் கொடுத்து, அவற்றின் அர்த்தங்களையும் சொல்லித் தந்தார். உடனே பாபாராம், ''இந்த சொற்றொடர்களே போதும். ஆங்கிலம் கற்பதில் வீணாகக் காலம் கழிக்க வேண்டாம்'' என்று அம் மூன்று சொற்றொடர்களை மட்டும் மனப்பாடம் பண்ணிக் கொண்டான்.

ரெங்காச்சாரியிடமிருந்து பாபாராம் நூறு ரூபாய் கடன் வாங்கினன். புரோமிஸ்ஸரி நோட் (Promissory Note) எழுதிக் கொடுத்தான். வாய்தா மூன்று வருஷமான பிறகும் ரெங்காச்சாரிக்குப் பணம் திருப்பிக் கொடுக்க வில்லை. ரெங்காச்சாரி நீதி மன்றத்தில் விண்ணப்பம் செய்தான்.

முன்சீப் பாபாராமைப் பார்த்து, ''பாபாராம்! நீ நூறு ரூபாய் கடன் வாங்கியது உண்மை தானே?'' என்று கேட்டார். பாபாராம் கொஞ்ச நேரம் தனக்குள், ''முன்சீப் முன்னிலையில் எனது ஆங்கில பாஷா அறிவைக் காட்ட வேண்டும். இது தான் தக்க வாய்ப்பு'' என்று யோசித்தான். உடனே அவன், ஆங்கிலத்தில் தான் கற்ற முதலாவது சொற்றொடரான ''Yes, Sir'' என்பதைக் கூறிவிட்டான். உடனே முன்சீப், ''அப்படியானல் தொகையைத் திருப்பிக் கொடு'' என்று உத்தரவிட்டார். பாபாராம், ''No, Sir'' என்று ஆங்கிலத்தில் சொன்னன். அப்பால் முன்சீப், ''ஒரு வருஷ சாதாரண சிறைவாசத் தண்டனையை உனக்கு நான் விதிக்கிறேன்'' என்று ஆக்ஞாபித்தார். பாபாராம், ''Very well Sir'' என்று தனது மூன்ருவது ஆங்கிலச் சொற்றொடரை உபயோகித்தான். பாவம்! ஆங்கிலம் அரை குறை கற்ற மூடன் பாபாராம் ஒரு வருஷம் சிறைவாசம் செய்தான்.

முன்சீப் கேட்ட கேள்விகளுக்கு ஆங்கிலத்தில் பதில் சொல்ல வேண்டுமென்ற முடுக்குத்தனத்தால் ஏமாறினன். அரை குறை ஆங்கிலம் ஆபத்தைத் தரும் என்பதை முன்னரே அறிந்திருந்தால் தெலுங்கு பாஷையில் தக்க பதில் அளித்து, சிறை வாசத் தண்டனையினின்றும் தப்பித்திருக்கலாம்.

# உ௫. துளசிதாஸரும் ஓர் பெண்மணியும்

இராம சரித்திரம் இயற்றிய துளசிதாஸர் கங்கா தீரத்தில் உலாவிக் கொண்டிருந்தார். மயானம் குறுக்கிட்டது. ஏராளமான ஆபரணங்கள் அணிந்த ஓர் யௌவனப் பெண்மணி இறந்துபோன தனது நாயகனின் பக்கத்தில் அமர்ந்து அகோரமாக அழுது கொண்டு இருந்தாள். முனிவர் வந்ததும் அடக்கமாக எழுந்து நின்று, ''மதிப்பிற்குரிய மஹானே! என் கணவன் போன மோக்ஷத்திற்குச் செல்ல ஆசீர்வதித்து எனக்கு வழி காட்டுங்கள்'' என்று இரங்கிய குரலில் வேண்டினுள்.

துளசிதாஸர், ''பெண்மணி! மோக்ஷத்தை உண்டாக்கிய அக்கடவுளுக்கு இவ்வுலகமும் சொந்தம் தானே?'' என்று வினவ, அதற்கு அப்பருவ நாயகி ''மோக்ஷத்தை நான் விரும்ப வில்லை. என் கணவன் பக்கத்தில் — அவர் எங்கிருந்தாலும் அங்கிருக்க நான் விரும்புகிறேன்'' என்ருள். துளசிதாஸர், ''பெண்ணே! வீட்டுக்குத் திரும்பிப் போ; கணவனுர் ஒரு மாதத்திற்குள் திரும்புவார். கவலைப்படாதே'' என்ருர். அத்தேவாமிர்த மொழிகளைக் கேட்டு மனந்தேறிய அப்பெண் வீட்டுக்குத் திரும்பினுள். தன் கணவனுர் ஓர் மாதத்திற்குள் திரும்புவார் என்ற நம்பிக்கை திடமாக எழுந்தது.

அன்று சாயுங்காலம் முதற் கொண்டு துளசிதாஸர் அப்பெண்ணின் வீட்டுக்குப் போய் பக்தியின் ஆழ்ந்த மர்மங்களைப் பற்றிப் போதிக்க லானுர். நாளாவட்டத்தில் அவளுடைய மனத்தில்

பக்தி ததும்பலாயிற்று. உலக சுகபோகங்களிடத்திலே வெறுப்பும், விரக்தியும் கொள்ளத் தொடங்கினுள். ஸ்ரீ ராமரைத் தன் கணவராகக் கருதி அவரைத் தன் ஹிருதயத்திலே நிலை நிறுத்தி வந்தாள்.

மாதம் முடிவதற்குள் ஓர் சினேகிதை வந்து, ''நீ ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் உன் கணவனுர் திரும்பி வந்து விட்டாரா?'' என்று கேட்டாள். அதற்கு அப்பெண், ''ஆம்'' என்ருள். அதற்கு அச் சினேகிதை, ''அவர் எங்கே இருக்கிருர்?'' என்று கேட்டாள். அவள் தன் கையை நெஞ்சின் மீது வைத்துக் கொண்டு; ''அவர் என் ஹிருதயத்தில் எழுந்தருளினுர். பாலும், நீரும் போன்று ஒன்ருகிவிட்டோம்'' என்ருள். அவள் மனம் எவ்வளவு தூரம் பண்பட்டு விட்டது என்பதை நினைக்க நினைக்க சினேகிதையினுடைய ஆச்சரியத்திற்கு அளவே இல்லை.

உறவினர்களின் மரணத்திற்காக அழாதே; கடவுளின் தரிசனத்திற்காக அழு. அவர் உனக்கு தரிசனம் அருளுவதன்றி உன் கண்ணீரையும் துடைப்பார்.

சத் சங்கத்தின் மஹிமை இதுதான். துளசிதாஸர் அப் பெண்ணுக்கு உபதேசிக்கவே, அவளது ஆத்மாவில் ஞானம் உதயமாயிற்று. இறந்துபோன கணவனை மறந்து, ஸ்ரீ இராம பிரானையே ஆத்ம நாயகராகப் பாவித்துக் கொண்டாள். என்னே சத் சங்கத்தின் மஹிமை!

# 26. மாயையின் மகன்

பிரஹ்மன் அல்லது ஆத்மா சர்வ வியாபகமான நித்திய புருஷர். எல்லாப் பிராணிகளின் ஹிருதயத்திலும் அவர் வாசஞ் செய்கிறார். அவர் சச்சிதானந்தம். இந்த உலகத்திற்கும், உடலுக்கும், உள்ளத்திற்கும், பிராணனுக்கும், இந்திரியங்களுக்கும் அவர்தான் ஆதாரம். அவரின்றி அக்கினி எரியாது, சூரியன் பிரகாசிக்காது, காற்று வீசாது, மனம் சிந்தனை புரியாது, காதுகள் கேட்கா, கண்கள் பாரா, நாசி முகராது.

அவருக்கு மாயா சக்தி ஒன்று உண்டு. மாயை என்று பெயர். துர்க்கை, காளி, காயத்திரி, குண்டலினி, சரஸ்வதி என்பவர்கள் யாவரும் மாயையின் தோற்றங்களாம். மின் சக்தி, காந்தம், சக்தி முதலியவை மாயையின் ஸ்தூலத் தோற்றங்களாகும். மனம், பிராணன், இந்திரியங்கள், பஞ்ச பூதங்கள் யாவும் மாயையின் மாறுதல்கள். மாயை மகா தந்திரக்காரி. அவள் எப்பேர்ப்பட்டவர்களையும் தன் வலைக்குள் வீழ்த்திக் கொள்வாள். பெண் சைதன்ய மாயை; பணம் ஜட மாயை. இவ்விரண்டும் அவளுடைய பிரதான மையலூட்டும் இரைகள். பெண்ணுக்கும், பொன்னுக்கும் ஆசைப்பட்டவர்கள் யாவரும் அவளது வலைக்குள் மீண்டும் மீண்டும் வீழ்ந்து ஜனன மரணச் சக்கரத்திலே சிக்கிக் கொள்கிறார்கள்.

சாத்தான் அல்லது பேய் அல்லது மோகம் என்பதுதான் மாயையின் முதலாவது மகன் (மூத்த மகன்). மாயை, சாத்தான் மூலம் பாழ் படுத்துகிறாள். சாத்தானின் பூர்வீக வாசஸ்தலம்

சுவர்க்கம். மிருத்யு லோகத்திற்கு மாயை தன் மகன் சாத்தானை அனுப்பினாள் — இவ்வுலகத்தாரை மயக்குவதற்காகவே! காமம் என்பவர் சாத்தானின் பிரதம மந்திரி. பாசாங்குத்தனம், பொய், துன்மார்க்கம், கோபம் முதலியோர் சாத்தானின் தூதர்கள். பேராசை, அகம்பாவம், மோஹம், பகைமை, பொறாமை ஆகியோர் சாத்தானின் நண்பர்கள்.

யௌவனப் பெண்களின் கண்களிலும், அதரங்களிலும், ஊடுருவிப் பாயும் பார்வைகளிலும், சுருண்ட கூந்தலிலும், ஜாடைகளிலும், ஹாஸ்யங்களிலும், பட்டுப் புடவைகளின் கவர்ச்சியான விளிம்புகளிலும், புன்முறுவலிலும், இன்பத் தேன் சொரியும் பேச்சிலும், அன்ன நடையிலும், பின்னல் ஜடையிலும் சாத்தான் அல்லது மோகம் வாசஞ் செய்கிறான். சாத்தான் இன்னும் சினிமாக்களிலும், மதுபானக் கடைகளிலும், விபசார விடுதிகளிலும், நடன சாலைகளிலும், பாங்கிகளிலும், கடைகளிலும், காபிக் கடைகளிலும், ஹோட்டல்களிலும், மோட்டார் கார்களிலும், ஆகாய விமானங்களிலும், பிரபுக்களின் கழுத்துப் பட்டிகளிலும், அவர்களுடைய முறுக்கு மீசைகளிலும், கைக்குட்டைகளிலும் வாசஞ் செய்கிறான். விஷமக்காரர்கள், கோள் சொல்லிகள், நிந்தனை செய்வோர், வம்புக்காரர்கள், இச்சகம் பேசுவோர் முதலியோருடைய உள்ளங்களிலும் சாத்தான் குடிகொள்கிறான்.

சாத்தான் வெவ்வேறு வழிகளில் மர்மமாய் வேலை புரிகிறான். சட்டைப்பைத் திருடர்களுக்கு சாமர்த்தியத்தைக் கொடுத்துப் பாழாக்குகிறதும் அவனேதான். கொள்ளையடிப்பதில் கொள்ளைக்

காரர்களுக்கும், அன்னிய தேசத்தாரின் பிராந்தியங்களை ஆக்கிரமிப்பதில் சர்வாதிகாரிக்கும், எதிரிகளைச் சர்வநாசம் பண்ணுவதற்காக விஷப் புகைகளைத் தயாரிப்பதில் விஞ்ஞானிகளுக்கும் சாமர்த்தியமும், பழக்கமும் ஊட்டுபவன் சாத்தானே! சாத்தான் தன்னுடைய தர்பாரிலே கம்பீரமான தோற்றத்துடன் அமைதியாய் உட்கார்ந்து குதூகலித்துத் தன் சொந்த வாசஸ்தலமாகிய சுவர்க்கத்தை மறந்து விடுகிறான்.

ஒரு நாள் தூதர்கள் ஓடிவந்து, ''மகாராஜா! ஓர் துர்ச்செய்தி. எங்களுக்குக் கெட்ட காலம் கூடிய விரைவில் வரப்போகிறது. சம்பல் என்ற ஊரில் விஷ்ணுதத்தன் வீட்டிலே கடவுளின் தூதன் ஒருவன் அவதரிப்பதாகக் கேள்விப் பட்டோம். இத்தூதன் அநேக சித்திகளும் ரித்திகளும் கைவரப் பெற்றவன். அவன் மக்களிடையில் தர்மத்தை உபதேசித்து துன்மார்க்கத்தை நீக்கப் பாடு படுவான். எங்களைக் கொல்வான். நாங்கள் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும்'' என்றார்கள். இதைக் கேட்டதும், சாத்தான் நெடுநேரம் மௌனம் சாதித்தான். சில காலத்திற்குப்பின் தூதர்கள் வந்து, ''மகாராஜா! அவதாரம் ஆகிவிட்டது. எங்களுக்கு அபாயம் வந்துவிட்டது. சநாதன தர்மத்தின் தூதர்கள் பலரும் பிரசாரத்திற்குக் கிளம்பி விட்டார்கள். 'தேவ தூதன் அவதரித்து விட்டார். ஆன்மீய உபதேசங்களுக்குத் தயாராகுங்கள். ஜபம், கீர்த்தனை செய்யுங்கள். 'நான் யார்?' என்று விசாரியுங்கள். தர்மம் செய்யுங்கள். காமத்தை அடக்குங்கள். பிரஹ்மச்சரியத்தை கைக்கொள்ளுங்கள். உண்மை பேசுங்கள். பிறருக்குத் தீங்கு செய்யாதீர்கள். துன்மார்க்கத்தை ஒழியுங்கள்' என்று உபதேசிக்கிறார்கள்.

தர்பாரை விட்டு எழுந்தான் சாத்தான். மகா உருக்கமான பிரசங்கம் செய்தான். அது பின்வருமாறு :— ''உண்மையான தூதர்களே! தைரியமாய் இருங்குள். உற்சாகமாய் இருங்கள். தேவதூதரையோ, சநாதன தர்ம பிரசாரகர்களையோ பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஒரே ஒரு அடியில் அவர்களைத் தொலைக்கிறேன். எழுந்திருங்கள். நாடு நகரங்களிலெல்லாம் சென்று' 'தேவதூதர் வந்துவிட்டார். ஆன்மீய உபதேசத்திற்குத் தயாராகுக' என்று நீங்களும் பிரசாரம் செய்யுங்கள். எல்லோரும் உங்களைச் சூழ்ந்து கொள்வார்கள். அவர்களிடையில் நாமிருப்பதால், தேவதூதரைத் தரிசிக்கத் தூய்மையற்றவர்களாக அவர்களைச் செய்து விடலாம். இதுதான் சிறந்த வழி'' அங்ஙனமே சாத்தானின் தூதர்கள் சென்று பிரசாரம் செய்தார்கள். சநாதனர்கள் செய்யும் பிரசார்த்தையே இவர்களும் செய்யலானுர்கள். சநாதன தர்ம பிரசாரகர்களைப் போலவே ஒழுகி வரலானுர்கள். பெரிய கூட்டம் கூடியது. பலரும் ஏமாற்றப்பட்டார்கள்.

தாடி மீசைகளுடனும் ஜடைகளுடனும் அநேகர் சந்நியாஸ வேஷந்தரித்து மேடைகளில் ஏறிப் பிரசாரம் செய்து மக்களை ஏமாற்றுகிறுர்கள், பல வகைகளிலும். ஒரு பிரசாரகர், ''சிஷ்யப் பெண்மணிகளே! ஆண்களுக்கும் பெண்களுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை. சர்வமும் பிரஹ்மன் அல்லது கிருஷ்ணன். நீங்கள் யாவரும் கோபிகள். வாருங்கள். நாம் ராஸலீலைகள் புரிவோம்'' என்று போதிக்கிறுர். இங்ஙனம் அவன் நயவஞ்சகம் புரிந்த சூழ்நிலையிலே தீமையை விதைக்கிறுன். ஓர் கள்ள வேதாந்தி, ''அஸி பிரஹ்மன். துஸி பிரஹ்மன். நீ பிரஹ்மன். நான் பிரஹ்மன்.

பிரஹ்மத்தின் ஆனந்தத்தை அனுபவிப்போம்'' என்று பிரசாரம் செய்கிறான். தூய ஆத்மாவாக உடலைப் பாவிக்கிறார்கள் மோசமான வேதாந்திகள்! ஆபாச உடலை பரிசுத்தமான ஆத்மாவாகப் பாவிக்க முடியுமா?

அன்பார்ந்த நேயர்களே! பொய்த் தீர்க்கதரிசிகளைப் பற்றியும் போலித் தேவ தூதர்களைப் பற்றியும் நயவஞ்சக யோகிகளைப் பற்றியும் ஜாக்கிரதையாயிருங்கள். சநாதன தர்மப் பிரசாரகர்களைப் போலவே பிரசாரம் செய்கின்ற சாத்தானின் தூதர்களென்று அறிந்து கொள்ளுங்கள். மக்களை ஏமாற்றி விடுகிறார்கள். ''உதர நிமித்தம் பஹுக்ருத வேஷம்'' (வயிற்றுப் பிழைப்புக்காக வேஷந்தரித்தவர்கள் என்று பொருள்.) ஆகையால், ஒழுங்கான ஆத்மீய நிர்வாக இயக்கம் ஒன்று இப்போது தேவை. சங்கீர்த்தனத் துறையிலும் அசுசி (தீய தன்மை) நிறைந்து விட்டது. அசுசி என்ற பிளவைப் புண்ணை நீக்கவேண்டும். ஐக்கிய மாகாணங்களிலும், பீஹாரிலும், பஞ்சாபிலும் சங்கீர்த்தன இயக்கம் வலுப்பெறுகிறது. ஒவ்வொரு வீட்டிலும் சங்கீர்த்தனம் தீவிரமாக நடைபெறுகிறதைக் காண மகிழ்ச்சியடைகிறோம். போலிச் சங்கீர்த்தனம் செய்வோர் அநேகர் தொழிலாகக் கொண்டு ஊர் சுற்றுகிறார்கள். பாவ சமாதி நிலை அடைந்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் சாமியார்களும் மலிந்து விட்டார்கள். அவர்கள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தரிசித்தவர்கள் என்று மேடையில் பிரசாரம் செய்கிறார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவானை நேரில் காட்டுவதாகச் சொல்லுகிறார்கள். முற்றிலும் ஏமாற்று வித்தை! மக்கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும். லீலைகள் புரியும் பாவனைகளைச் சில பிள்ளைகளுக்குக்

கற்றுக்கொடுத்து அவர்களை மேடையிலேற்றுகிறார்கள்; நடிக்கிறார்கள். வேடிக்கை பார்ப்போர்களின் மனத்தில் தீய உணர்வு தலையெடுக்கிறது. நல்லொழுக்கமுள்ள ஆத்மீய மஹாத்மாக்களால் தேர்ந்தெடுத்த சில பக்தர்களிடையில் ஏகாந்தமான ஸ்தலத்திலே லீலை செய்து காட்டப்பட வேண்டியது நியமம். பொது மேடையில் இதை நடித்துக் காட்டலாகாது. பாமரர்களுக்கு ஒன்றும் புரிகிறதில்லை. அவர்கள் எளிதில் ஏமாறுகிறார்கள்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய தரிசனம் அவ்வளவு சுலபமல்ல. மீராபாய் போன்றவர்களும் அவதார புருஷர்களும் 500 வருஷங்களில் ஒருமுறைதான் தோன்றுகிறார்கள். மஹாத்மாக்களோடு ஸத்ஸங்கம் புரியுங்கள். மதாசார நூல்களைக் கற்கவேண்டும். தியானமும் ஜபமும் செய்யுங்கள். "நான் யார்?" என்று விசாரணை செய்க. ஸாத்வீக குணங்களை விருத்தி செய்யுங்கள். இமயத்தையும் நியமத்தையும் பயிலுங்கள். சாத்தானிடமிருந்தோ அவனுடைய தூதர்களிடமிருந்தோ நீங்கள் விடுதலை பெறுவீர்கள். அவர்கள் உங்களைக் கண்டு மிகவும் பீதியடைந்து ஓட்டமெடுப்பார்கள்.

# 27. ஓர் அனுபவ வேதாந்தி

விசார சாகரம், பஞ்சதசி, ஆத்ம போதம் ஆகிய வேதாந்த நூல்களை ராதாகிருஷ்ணன் படித்தான். தான் ஓர் பெரிய வேதாந்தி என்றும், ஆத்மாநுபூதி பெற்றவன் என்றும் தனக்குள்ளாகக் கருதினன். ஓர் குருவின் மேற்பார்வையின் கீழிருந்து அவன் எந்த நூலையும் கற்றதே இல்லை. நிதித்தியாசப் பயிற்சி எதுவும் அவனுக்குத் தெரியாது.

ஒருநாள் அவன் ஒரு கோப்பை பால் பருகக் கடைக்குச் சென்றான். ''எங்கும் ஒரே ஆத்மா விளங்குகிறது. 'ஒவ்வொன்றும் என்னுடையது. எல்லாம் என்னுடையது. சர்வமும் பிரஹ்மமயம்' என்று படித்துள்ளேன். இப்போது நான் அனுபவ வேதாந்தி ஆகப்போகிறேன்'' என்று தத்துவம் பேசிக்கொண்டே பாலைப் பருகினன். கடைக்காரன் பக்கத்துக்கடைக்கு சர்க்கரை வாங்கப் போனான். பணம் வைக்கப்பட்டுள்ள பெட்டியோ திறந்தபடி இருந்தது. கடைக்காரன் பெட்டியை மூடிப் பூட்டிட மறந்தான். ராதாகிருஷ்ணன் அப் பெட்டியிலிருந்து நூறு ரூபாய் நோட்டு ஒன்றை மெள்ள எடுத்துக்கொண்டு, சந்தடி பண்ணமல் நடக்கலானன். அவன் தனக்குள், ''இப்பணப் பெட்டி என்னுடையது. இப்பணம் என்னுடையது. ஒவ்வொன்றும் என்னுடையது. வேதாந்தத்தின் உண்மையான கருத்தை இன்றுதான் நான் உணர்ந்தேன். வேதாந்தம் எவ்வளவு அனுபவமாயிருக்கிறது! வேதாந்தத்தின் உண்மையான தத்துவத்தின்படி வாழ்ந்தால் அது எவ்வளவு அழகாயிருக்கும்! நான் எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறேன். உலகத்துச் செல்வம் அனைத்தும் இப்போது என்னுடையது'' என்று எண்ணமிடலானன்.

கடைக்காரன் திரும்பினான். பணப்பெட்டி திறந்து கிடப்பதைக் கண்டான். பணத்தை எண்ணிப் பார்த்தான்; ஒரு நூறு ரூபாய் நோட்டு காணமற்போனதை அறிந்தான். உடனே ஓடிப் போய் ராதாகிருஷ்ணனைப் பிடித்துக் கொண்டு வந்து போலீஸ் சப்இன்ஸ்பெக்டரிடம் ஒப்புவித்தான். ஜில்லா மாஜிஸ்திரேட் முன் ராதாகிருஷ்ணன் விசாரணைக்கு நின்றான்.

மாஜிஸ்திரேட் : ராதாகிருஷ்ணா! கடைக்காரனுடைய பணப்பெட்டியிலிருந்து நூறு ரூபாய் நோட்டை எடுத்தாயா?

ராதாகிருஷ்ணன் : ஆம், பிரபுவே. பெட்டியிலிருந்து நோட்டை எடுத்தேன்.

மாஜிஸ்திரேட் : அதை நீ ஏன் எடுத்தாய்?

ராதாகிருஷ்ணன் : தினசரி வாழ்க்கையில் வேதாந்தம் பழகி அனுபவிக்க விரும்பினேன். வேதாந்த தத்துவப்படி வாழ்க்கை நடத்த வேண்டுமென்பது எனது விருப்பம். வேதாந்த புத்தகங்களில் 'ஒவ்வொன்றும் என்னுடையது, எல்லாம் என்னுடையது' என்று படித்துள்ளேன். எனவே, பெட்டியிலுள்ள பணம் என்னுடையதாகக் கருதி எடுத்துக் கொண்டேன். நான் பணத்தைத் திருடவில்லை; நான் திருடன் அல்ல.

மாஜிஸ்திரேட் : உண்மையிலே மிக அழகான வேதாந்தம்! இத்தகைய வேத்ாந்திகளைத்தான் உலகம் உண்மையில் விரும்புகிறது. அப்பால்தான், உலகத் துயரங்கள் ஒழியக்கூடும். நல்லது, ராதாகிருஷ்ணு! வேதாந்தத்தின் மற்ருெரு பகுதியைக்கேள். ''நான் உடல் அல்ல; நான் ஆத்மா'' என்று வேதாந்தம் முழக்குகிறது. உடற் பற்றுக்குமேல் நீ எவ்வளவு தூரம் சென்றிருக்கிருய் என்பதை நான் பார்க்கட்டும்.

மாஜிஸ்திரேட் போலீஸ்காரனைக் கூப்பிட்டு, ராதாகிருஷ்ணனை கடுமையாக — ரத்தம் தெறிக்குமாறு — சவுக்கினுல் அடிக்கும்படி ஏவினுர்.

ராதாகிருஷ்ணன் அகோரமாகக் கதறி அழத் தொடங்கி, ''என் பிரபுவே! கௌரவமிக்க மாஜிஸ்திரேட் துரையே! வேதாந்தத்தின் இந்தப் பகுதியை நான் பயிற்சிக்கவில்லை. இது நிரம்பவும் கடினமானது. இப்போது நான் வெறும் உடலாக இருக்கிறேன். தயவு செய்து போலீஸ்காரனை விட்டு அடிக்காமல் கருணை காட்டுங்கள். அடியைப் பொறுக்க என்னுல் முடியாது. வெகு சீக்கிரம் மூர்ச்சித்துப் போவேன். என் குற்றத்தை இப்போதே உணர்ந்தேன். வேதாந்தம் உண்மையில் மிக்க கடினமானது. புத்தி சுவாதீனப் பட்டது. இனிமேல், இத்தகைய மூடச் செயல்களைச் செய்யவே மாட்டேன். என்னை மன்னியுங்கள்'' என்று கெஞ்சலானுன்.

மாஜிஸ்திரேட், ''ராதாகிருஷ்ணா! பிரஹ்ம நிஷ்ட பிரஹ்ம சுரோத்ரி குரு தேவரிடம் போ. அவருடன் 12 வருடம் வாழ்ந்துவா. மனப்பூர்வமாகத் தொண்டு செய். அவரிடம் வேதங்களை கவனமாகக் கற்றுக்கொள். சாதன சதுஷ்டயங்களை வளர்ச்சி செய். நற்குணங்களைப் பயில். கேள், சிந்தனை செய், தியானி—உன் ஆத்மாவை உணர்ந்துகொள். நான் பிரஹ்மன், சர்வமும் என்னுடையது என்று அப்பால் கூறலாம்'' என்றார்.

ராதாகிருஷ்ணன் மாஜிஸ்திரேட்டின் புத்திமதிகளைப் பின்பற்றினான். ரிஷிகேசத்திற்குச் சென்று, குருவைக் கண்டுபிடித்தான். 12 வருடம் அவருடன் வாழ்ந்தான். கடுமையான தவமும், தியானமும் புரிந்து இறுதியில் ஆத்மாநுபூதி பெற்றான்.

தற்காலத்திலே, வரண்ட அல்லது வாய் வேதாந்திகளே பெருகி விட்டனர். வேதாந்த வீண் பேச்சுக்கள் அதிகம். ராதாகிருஷ்ணனைப் போன்ற போலி அநுபவ வேதாந்திகள் மலிந்தனர். வேதாந்தத்தைப் பற்றிப் பேசுவதாலோ, விசார சாகரம் அல்லது பஞ்சதசி முதலிய நூல்களைப் படிப்பதால் மட்டுமோ நீ உண்மையான அநுபவ வேதாந்தி ஆகமாட்டாய். அநுபவ வேதாந்தம் அபூர்வமானது. சாஸ்திரங்களைப் பற்றிய நல்ல அறிவுடன் தக்க ஆராச்சியும் நீ செய்யவேண்டும். மலம், விக்ஷேபம், ஆவரணம் இவற்றைப் போக்க வேண்டும். கஷ்டப்படத்தான் வேண்டும்.

கடுமையான சாதனையில் ஈடுபட வேண்டும். தேக அத்யாஸம் அதாவது தேகாபிமானத்தை விட்டுவிட வேண்டும். முக்குணங்களைக் கடந்து, பஞ்ச கோசங்களை நீக்கி, மூன்று அவஸ்தைகளையும் விலக்கி முன்னேறுவதன்றி,. இடையறாத பெருந் தியானத்தின் மூலம் உனது சச்சிதானந்த ஸ்வரூபத்தைக் கண்டுகொண்டு, அதிலேயே பிரத்தியக்ஷமாய் அடைக்கலம் புகவேண்டும். அப்பால்தான், அனுபவ வேதாந்தியாகவோ அல்லது அநுபூதி மஹானாகவோ அல்லது ஜீவன் முக்தனாகவோ நீ ஆவாய். ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்ற அநுபவ வேதாந்திகளுக்கு வெற்றி கிட்டுமாக! அவர்களுடைய ஆசிகள் உங்கள் எல்லோருக்கும் நிலைத்து நிற்குமாக.

ஓம் தத் ஸத்.

" முத்தமிழ்ப்பண்ணை "
வைரி செட்டிப்பாளையம்-621012,
திருச்சி மாவட்டம்.

## சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| இயற்கை மருத்துவம் | ... 35–00 |
| ஆத்ம ஞானம் | ... 30–00 |
| குருதேவரின் அமுதமொழிகள் | ... 20–00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | ... 20–00 |
| தர்ம உபதேசம் | ... 20–00 |
| ஓம் தியானம் | ... 15–00 |
| குண்டலினி யோகம் | ... 15–00 |
| சிவானந்தரின் வாழ்க்கை வரலாறு | ... 15–00 |
| சிவானந்தரின் அமிர்தமொழிகள் | ... 15–00 |
| சிதானந்தரின் வாழ்க்கை வரலாறு | ... 15–00 |
| சிறுவர் சிறுமியர்க்குத் தெய்வீக வாழ்க்கை | ... 15–00 |
| ஜபயோகம் | ... 15–00 |
| சிவானந்த யோகம் | ... 15–00 |
| உலகின் ஆன்மீக அறநெறி | ... 10–00 |
| தெய்வீகக் கதைகள் | ... 10–00 |
| பகவத்கீதை (ஸ்லோகம்-அர்த்தம்) | ... 10–00 |
| பகவத்கீதை (அர்த்தம் மட்டும்) | ... 5–00 |
| அமிர்த கீதை | ... 5–00 |
| யோக வாழ்க்கை (வினு–விடை) | ... 5–00 |
| சிவானந்தரின் மனித சமுதாய சேவை | ... 5–00 |
| சாதனைப் பயிற்சிக் குறிப்புகள் | ... 3–00 |
| குரு அருளும் அதை அடையும் வழியும் | ... 3–00 |
| தியான யோகப் பயிற்சி | ... 3–00 |
| ஜபமும் மன ஒருமைப்பாடும் | ... 3–00 |
| சாதனையும் சத்சங்கமும் | ... 3–00 |
| நவீனகால மனிதனுக்கேற்ற சாதனை | ... 3–00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 5–00 |